உ

கடவுள் துணை

# சுயமரியாதை கண்டன திரட்டு

[ஆஸ்திகம் என்றும் தழைத்து ஓங்குக
நாஸ்திகம் முற்றும் மறைக!!]






சம்பந்தர் அப்பர் சுந்தரர் மாணிக்கவாசகர்

ந்தகம் கிடைக்குமிடம் :

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு புத்தகசாலை,
நெ. 4/34, நயினியப்ப நாயக்கன் வீதி,
...ன் (P.O.) சென்னை
1929




ஸ்ரீ

ஸ்ரீரஸ்து.

ஆஸ்திகர் பிரசாரம்

# ஸ்ரீ ராமாயணத்தின் சிறப்பு.




[1929-வருஷம் ஏப்ரல் மாதம் 20-ந் தேதி மாலை சென்னை ராயபுரம் பனைமரத்தொட்டி கண்ணபிரான் பக்த ஜனசபையின் ஆதரவில் ஆஸ்திகச் சங்கத்தின் கூட்டமொன்று நடந்தது. ஸ்ரீமான்கள் சுந்தரமூர்த்தி செட்டியார், சாது கோ. வடிவேலு செட்டியார், பண்டிதை அஸலாம்பிகை அம்மையார், கிருஷ்ணசாமிப் பாவலர், சிவசங்கர முதலியார், நெல்லை அப்பாதுரை, காழி சுப்பிரமண்யம், மயிலை ஜெயவேலர் உள்பட ஆயிரக்கணக்கான ஜனங்கள் விஜயம் செய்திருந்தார்கள். அநேக பெண்மணிகளும் வந்திருந்தனர். திரு. சுந்தரமூர்த்தி செட்டியாரவர்கள் கூட்டத்தில் தலைமை வகித்தார். இராமாயணச்சிறப்பு என்பதைப்பற்றி பலராலும் உபந்நியாசிக்கப் பட்டது.]

## ஸ்ரீமான் ஆசிரியர், கோ. வடிவேலு செட்டியார்.

முதலில் ஸ்ரீமான் ஆசிரியர் கோ. வடிவேலு செட்டியார் பேசுகையில், சுய மரியாதைக்கட்சியைச் சேர்ந்தவர்கள் சுவாமியே இல்லை, புராணங்களெல்லாம் கட்டுக்கதை, என்று கூறுவதுடன் சாதியும் வேண்டாம், சாதிப்பட்டங்களும் வேண்டாமென்று பேசிப் பொது ஜனங்களை ஏமாற்ற முயன்று வருகின்றார்கள் என்றும், சிலர் அதை நம்பி அந்தக் கட்சியின் வழிபின்பற்றி நிற்கின்றார்கள் என்றும், ஆஸ்திகத்துக்கும், சமயத்துக்கும், தமிழ் நூல்களுக்கும், இதுபோழ்து அக்கட்சியினர் செய்து வரும் தீமைகளை நாம் பார்த்துக்கொண்டு சும்மாவிருப்பது தருமமாகாதென்றும், உலகமெல்லம் அநாகரிகத்தில் மூழ்கி மிருக வாழ்க்கையை மேற்கொண்டிருந்த காலத்திலே நம் தமிழ்ப் பெருநாடு உலகத்துக்குச் சமயத்தையும் - சமய உண்மைகளையும். உயரிய ஞான நூல்களையும் அளித்ததென்றும் அப்படிப்பட்ட நம் நாடு இப்பொழுது அடைந்துள்ள நிலைமையை நோக்கி வருத்தமாயிருக்கிறதென்றும் கூறினர்.

பிறகு ஸ்ரீராமாயணத்தைப்பற்றிப் பேசுகையில் வான்மீகி, கம்பன் முதலிய பெரியார்களெழுதியுள்ள இராமாயணத்திலிருந்து நாம் எவ்வளவு பெரிய நீதிகளைப்பெற முடியுமென்பதை நீங்களே யறிவீர்கள். கம்பராமாயணத்தின் சிறப்பும், அதிலுள்ள கவிகளினழகும் அதைப் படிப்பவர்களறிவார்களேயன்றி படிக்காத கூட்டத்தவர் அறிய முடியுமா? சமய நூல்களையும், புராணங்களையும், சாஸ்திரங்களையும் சிறிதுகூட ஆராயும் சக்தியுடையவர்கள் அக் கட்சியிலில்லை. “அவலை நினைத்து உரலை இடிப்பதுபோல்'' ஏதோ ஒன்றைத் தம் மனதிற்கொண்டு அக் கட்சியினர் இராமாயணம் கட்டுக்கதை, இரா

5-b

மன் பேடி, சீதை விபசாரியென்று கூற முன் வந்துவிட்டனர் இதை நீங்கள் கேட்டுக்கொண்டு சும்மா இருக்கப்போகின்றீர் களா?

ராம என்ற பதத்தின் பொருள் எவ்வளவு அழகும், சிறப்புமுடையதாயிருக்கிறது. ராம என்று ஒருவன் தியா னித்தாலே பிராணயாமமாகும். "ரா" என்று உச்சரிக்கும் பொழுது காற்றை வெளிப்படுத்தி "மா" என்ற எழுத்து சுவாசத்தை உள்ளிழுக்கின்றது. அதற்கு யோகமுறையில் ரேசகம், பூரகம், கும்பகம் என்று கூறப்படுகிறது ஒரு நாளில் 21600 பிராணயாமம் ஒரு திடசரீரமுள்ள மனிதன் நடத்துகிறான். ரேசகமென்றால் காற்றை வெளிவிட்டு, பூரக மென்றால் உள்ளிழுத்து, கும்பகமென்று லதையடக்குதலென்ப தாம். ராம மந்திர தியானத்தினாலேயே ஒருவன் இப்படிப் பட்ட யோக வழிக்குச் சாதனமாக இலங்கும் பிராணயாமத்தை எளிதில் நிறைவேற்றக்கூடும். சைவர்களுக்கு "சிவ" என்ற மந்திரமும், வைணவர்களுக்கு "ராம" என்ற மந்திரமும் நன்கு அமைந்திருக்கின்றன. பிராணயாமம் செய்யும் ஒரு வனது மூக்குக்கு 12-அங்குல தூரத்தில் ஓர் எலுமிச்சம் பழத்தை வைத்தால் அது அவனது பூரக சத்தியா லசைந் நாடும் அம்மாதிரி யானும் செய்து காட்ட முடியும் நூல் களைக் கற்பதினால் பயனென்று மில்லை. மன அடக்கமே பெரி தும் வேண்டற்பாலது. எல்லா ஜாதியாரும், எல்லா தேசத்தா ரும், ஒரே அருளைப் பெறவே எல்லாம் வல்ல பரம் பொருளை "சிவா" என்றும், "ராமா" என்றும் தியானிக் கிறார்கள். "ஸ்ரீருத்திரம்" என்ற நூலிலே சிவ என்ற மந்திரத் தின் பெருமை நன்கு விளக்கப்பட்டுள்ளது. ராம என்று ஒரு வன் தன் வாழ்நாளில் தியானஞ் செய்து தன் மரண காலத்தி லும் ராம என்றே பிராணனை விடுவானானால் அவன் ஆண்டவ

னது பேரின்ப உலக வாழ்வை அடைகின்றான். அவனது ஆத்மாவும், மனமுற அந்த ராமமந்திரத்திலேயே அடங்குகின்றது. அப்படிப்பட்ட பெருமையுள்ளது இந்த ராமா என்ற மந்திரம். "ராமமந்திரமே கற்கண்டு" என்று பெரியார் கூறுகின்றார்கள்.

'நன்றாகண்டீர் நமச்சிவாய' என்பது திருமூலர் திருமந்திரத்தில் நன்குவிளக்கப் பட்டிருக்கிறது, மனமடங்கினால்தான் ஒருவன் ஈசன் திருவடியை அடைய முடியும். அப்படிப்பட்ட பெருமை வாய்ந்த ராமனது சரித்திரமாகிய இராமாயணத்தை இழித்துக் கூறும் அறிவிலிகளை நாம் என்னென்று சொல்லுவது? ராமன் யோகி, ராமன் அரிய நீதிகளை உலகிற்குப் போதித்துள்ளான். அவனது சிறப்பும், கற்புக் கனிகலமாக விளங்கும் சீதையின் சிறப்பும் ஒருங்கே விளங்க வைக்கும் அரிய நூல் ராமாயணமல்லவா? சீதையைச் சிறையெடுக்க இராவணன் இராமனுடன் போர்புரிந்து தனது படை சைன்னியம், கிரீடம், ரதம், உற்றார், சுற்றத்தார் முதலிய எல்லோரையு மிழந்து நிற்கையில் இராமன் அவனைக் கொல்லாமல் இரக்கங் காட்டி "இன்று போய் நாளை வா" என்று கருணையுடன் அனுப்புவாரேயானால் அவனுடைய பெருமையென்ன? தன் மனைவியைத் தூக்கிக்கொண்டுபோய்ச் சிறை வைத்திருக்கு மொருவனை ஒரு மனிதன் தருணம் வாய்த்த பொழுது கொல்லாமல் விட்டுவிடுவானா?

"பிறர் மனை விரும்புவோர் கிளையோடும் அழிவர்" என்பது பழமொழியல்லவா? திருக்குறளிலும் நாயனார் இவ்விஷயத்தைப்பற்றி நன்கு விளக்கியுள்ளார் "நாளையாவது சீதையைக் கொண்டுவந்து விட்டுவிடு" என்று இராவணனுக்குச் சொல்லி எவர் இராமனைப்போல தயவுடன் உரைப்பர்? எதிரிகளிடத்தும், விரோதிகளிடத்தும் கருணை காட்டும் சிறப்பு

ராமனுக்கல்லவா உள்ளது. ராமன் தன் பெற்றோர்களிடத்தி லும் நண்பர்களிடத்திலும், குடிகளிடத்திலும், காட்டிய அன்பு எத்தகையது? மனக்குரங்கை அடக்கியவனுக்கும் காட்டி லுள்ள குரங்குகளும் மிருகங்களும் துன்பம் செய்யா. பெரிய யோகிகளும் ஞானிகளும் எங்கு வாழ்ந்துவந்தார்கள்? காடு களிலன்றோ? அப்படிப்பட்டவர்களுக்கு காட்டில் வாழும் மிருகங்களாவது, பாம்புமுதலிய விஷ ஜந்துக்களாவது துன்பஞ் செய்ததாக நாம் படித்தது மில்லை, கேட்டது மில்லை. இராமன் தன் மனதை யடக்கிச் சிறந்த யோகபுருடனாக இருந் ததினால்தான் அவனுக்குக் காடிகளும் குரங்குகளும் துணை செய்தன. மனச்சாந்த முள்ளவர்கட்கு அவனைச் சூழ்ந்தவர்க ளும் சாந்தமாகவே யிருப்பார்கள். மலைப்பாம்புகளும் ரிஷி கள் கூட்டத்துடன் வசித்திருக்கவில்லையா?

"தந்தை சொல் மிக்க மந்திர மில்லை" என்ற உண்மை யை விளக்கவும் சத்தியத்தைக் காக்கவுமன்றோ இராமன் வன மேகினன்.

பிள்ளைகளுக்குத் தகுந்த கல்வியளித்து அவர்களை நல் வழிகளில் திருப்ப முயலுவதே தந்தையரின் கடனாகும். பிள்ளைகளும் தங்களரிய ஒழுக்கத்தாலும், நடத்தையாலும் பார்ப்போர் "இவன் தந்தை இவனைப் பெற என்னதவம் செய் தானோ" என்று சொல்லும்வண்ணம் நடத்தல் வேண்டும். அந்த உண்மையை ராமன் தனது நடத்தையால் நன்கு விளக்க வில்லையோ?

தசரதன் வசிட்டரை குருவாக வைத்துத் தனது குமாரர் களுக்குத் தகுந்த கல்வியும், ஒழுக்கமும் ஏற்படும்படி செய்ய வில்லையா?

பரதன் எப்படிப்பட்டவன்! அவன் அன்னை கைகேயி அவனுக்காக அவனது தந்தையிடமிருந்து பெரிய ராஜ்யத்தை வாங்கி வைத்துக்கொண்டிருந்தபோதிலும் அண்ணா ராமன் தவவேடம் தாங்கிக் காட்டிற்குச் சென்றானெனக் கேட்டதும் என்ன செய்தான்? தற்கால சகோதரர்களுக்குள் இவ்வண்ணைக் காண்கின்றோமா? எப்படியாவது ராமனை அழைத்து வந்து அவனுக்கு அயோத்தி மாநகரின் முடிசூட்ட வேண்டுமென்று முயன்ற பரதனின் சகோதர வாஞ்சையும், பெருமையுமென்ன?

வாலியைக் கொல்லச் செய்து, மாரிகாலம் சென்று பிராட்டியைத் தேடத் தான் வருவதாகச் சென்ற சுக்கிரீவன் கோடை காலம் பகுதியாகியும், வராமையைக் கண்ட இலக்ஷ்மணன் இராமனிடம் "அண்ணா! சொல்லுறுதி தவறினான் சுக்கிரீவன்; சகோதரனையும் கொல்லச்செய்தான் அசடன்" என்று சொல்ல "இராமன்" இலக்ஷ்மணா! எல்லாரும் பரதனாவனோ? என்றார்.

இப்படிப்பட்ட அரிய நூலை பொய்க்கதை என்று கூறுகின்றனர். இராவணன் சிறந்த யோகி. சிவபெருமானின் அரிய பக்தன். அவன் அரிய தவஞ் செய்து சிவனையே நேரில் கண்டு அரிய வரங்களையும் பெற்றவன். இராமன் இராவணனது சிரங்களை 101 முறை கொய்து மீண்டும்மீண்டும் அவன் தலைகள் சிவபெருமானின் வர மகிமையால் முளைத்ததைக் கண்டு கோதண்டத்தில் பிரம்மாஸ்திரத்தைப் பூட்டி அவனைக் கொன்றார். வெளிப்படையான பொருளில் இப்படித் தோன்றுகிறதே யல்லாது அறிஞர் வேறுவிதமாய்ப் பொருட்படுத்தியுள்ளார். அன்பு என்ற பிரமமாஸ்திரத்தைக்கொண்டு இராவணனின் ஆத்மாவை எள்ளளவும் விடாது சோதித்து அவனில் பக்தியைப் பெருக்கித் தன் மயமாக்கிக் கொண்டாரென்பதாம்.

ஈரோடு நண்பர் விதண்டாவாதஞ் செய்கிறார். மதமே இல்லையென்கிறார். தனக்கொன்றுமில்லை யென்கிறார். கோயில் களில் பார்ப்பனர்களேஎல்லாவற்றையும் ஏப்பம் விடுகிறாரென்று கருதிக் கோயில்களைஇடிக்க வேண்டு மென்கிறார். உற்சவங்களை ஒழிக்க வேண்டு மென்கிறார். புராணங்களையும் தமிழ் நூற் களையும் கொளுத்தவேண்டு மென்கிறார்.

உதாரணமாகச் சென்னை பெத்துநாய்க்கன்பேட்டை இரா சப்ப செட்டித் தெருவில் திருக்கோயில்கொண் டெழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ முத்துக்குமார சுவாமி கோயிலென வழங்கும் எங்கள் கந்தசாமி கோயில் பிர்ம உற்சவத்துக்கு 25000 ரூபாய் செலவாகின்றது. அதில் சுமார் 400-ரூபாய் வரை யில்தான் பிராமணர்களுக்கும்குருக்கள் மார்களுக்கும் செல்லு லுகின்றது. பாக்கியுள்ள பெருந்தொகையை நமது பிராமண ரல்லாத சகோதரர்களே அடைகின்றார்கள் உண்மை இப் படியிருக்க, அதற்கு மாறாகச் சொல்லுவதை நீங்கள் நம்ப வேண்டாம். ராமசாமியார் அவலை நினைத்துக்கொண்டே உரலை இடிக்கின்றார் அவர் 8 கோயில்களுக்கு தர்மகர்த்தா!

கற்புக்கணிகமா யிலங்கும் சீதையின் சிறப்பையும் உய ரிய நீதிகளைப் போதிக்கும் இராமனது செயல்களையும் விளக் கும் இராமாயணத்தை எவர் பொய்யென்று துணிந்து கூற முன் வருவர்? ஆதலால், நீங்கள் அக் கட்சியினர் காட்டும் மோச வழி செல்லாது ஜீவபிரம்ம ஐக்கியத்துக்குச் சாதகமாகவுள்ள இராம மந்திரத்தை மேற்கொண்டு இராமனது கதையை நன்கு படிப்பதுடன் அவன் காட்டியுள்ள உயர்வழியுன்னி நடக்கும்படி வேண்டிக் கொள்ளுகின்றேன். நல்வழி காட்ட வந்த தேசபந்துவை ஒவ்வொருவரும் வாங்கிப் படிப்பதுடன் உங்கள் நண்பர்களையும் அம்மாதிரி செய்யத் தூண்டும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்'' என்று பேசி முடித்தார்.

## பண்டிதை அசலாம்பிகை அம்மையார்.

பேசியதாவது:—கம்பனைப் பற்றியும் அவனது கவிச் சுவையைப்பற்றியும் சிறிது கூற விரும்புகின்றேன். உட லுக்கு உணர்வை அளிக்கக்கூடியதும், உற்சாகத்தை ஊட் டக் கூடியதும் கம்பனது கவிச்சுவை எனது பதினைந்தாவது வயதுமுதல் கம்பனது கவிச்சுவை என் நரம்புகளிலெல்லாம் ஊறியிருக்கின்றது. கம்பராமாயணத்தில் எனக்கு அளவு கடந்த பற்றுண்டு. இராமாயணம் ஒழுக்கத்தையும், நீதியை யும் போதிக்கும் ஓர் உயரியநூல். சீதையைக் கற்பிழந்தவ ளென்றும், தட்டுவாணியென்றும் இராமசாமியாரின் கூட்டத் தார் கூறுவது என் போன்றாரின் மனத்தை அறுக்கின்றது. கற்பிற்கணிகலமாக விளங்கிய அந்த அம்மையை இப்படிக் கூறு வது நியாயமாகுமா? இராவணனது வீட்டிலும் இராமனையே சதா தியானித்துக்கொண்டிருந்த கற்பரசியின் பெருமையை நாம் என்னென்று சொல்வது! பெண்கள் தங்கள் கற்பைக் காத்துக்கொள்ளவேண்டுமென்று விரும்பும் ஆடவர்களும் தங் கள் கற்பைக்காத்துக் கொள்ள வேண்டுமல்லவா? கற்பைக் காத் துக்கொள்ளும் பொறுப்பு பெண்களுக்கு மட்டுமல்ல; ஆண் களுக்குமுண்டு என்பதை இராமாயணம் நன்கு விளக்கிக் காட்டுகின்றது.

இராவணன் அசோகவனத்தில் சீதையிடஞ் சென்று "உன் கணவனைக் கணத்தில்கொன்றுவிடுவேன்; ராமனைக்கொன் ருல் நீ உயிர் தரிக்கமாட்டாயென்று கருதி உன்மீதுள்ள அன் பினல் கொல்லாது விடுத்தேன்" என்றான். அதைக் கேட்ட பிராட்டியாரும் நகைத்து "அடா! ராவணா! உனது கேவலமான வாழ்க்கையைப்போலுள்ளதோ எங்களது தாம்பத்திய வாழ் க்கை. இராமனை உன்னால் கொல்ல முடியாது. அப்படி நீ

அவரைக் கொல்ல விரும்புவாயானால் என்னைக் கொன்றுவிடு. நான் இறந்த அக்கணமே அவரது உயிரும் உடலை விட்டு நீங்கிவிடும்'' என்றார்.

இப்படிப்பட்ட ஒழுக்கமும், அருமையும் வாய்ந்த நூல் வேறு எந்நாட்டிலுமில்லை இந்நூலில் இராமர், சீதை இருவரது உண்மைக்காதலும், வாழ்க்கைச் சிறப்பும் உங்களுக்கு விளங்கவில்லையா?

இராவணன் சுய உருவத்துடன் பல முயற்சிகள் செய்தும் சீதையை நெருங்க முடியாததைக் கண்டு இராமன் போல் தன் மாயையால் உருக்கொண்டு சீதையை நெருங்கினன் அச்சமயம் அவன் இராமனின் திருவுருவைத் தாங்கியிருந்தபடியால் சீதையை அடையவேண்டுமென்ற எண்ணமே அவன் மனத்திலிருந்து நீங்கியதாம். இதிலிருந்து அந்த இராமனின் உருத் தாங்கிய இராவணனும் அச்சமயத்தில் திருந்தினனென்றால் உண்மை இராமனின் ஏகபத்தினி விரதப்பெருமை விளங்கவில்லையா?

அப்படிப்பட்ட இராமனைப் பேடியென்றும், மடையனென்றும் கூறுகின்றார்கள். எல்லோர் மனத்தையும் இன்பத்தில் மூழ்கும்படிச் செய்வது இராமநாமமே. இதைத் துளசிதாசர் நன்கு கூறியுள்ளார் பிறனில் விழைவது கொடியது, வெறுக்கத் தக்கது, அருவருக்கத்தக்கது என்பதை விளக்கும் நூல் இராமாயணமாகும்.

“ தருமம் குன்றி அதருமம் தழைத்தோங்கும் காலத்தில் உலகில் தருமத்தை நாட்டவும், சத்தியத்தை வளர்க்கவும், பகவான்அவதரிப்பது உண்மையே.''

இராமன் அவதாரபுருடன். கைகேயி தனது கணவ னிடம் வரம்பெற்று இராமனைநோக்கி "இராம! உன்தந்தையார் உன்னைத் தவவேடந்தாங்கி பதினான்கு வருடம் காட்டிற்சென்று வசிக்கும்படியாகவும், உன் தம்பியும், என் பிள்ளையுமாகிய பர தன் இந்த அயோத்திக்கு அரசனாகவேண்டுமென்றும் கட்டளை யிட்டுள்ளார்" என்று கூறியதும், இராமன் "தந்தையின் கட் டளையாக அது இருந்தாலும், இல்லாவிட்டாலும், நீங்களே அப்படி கட்டளையிட்டபோதிலும் நான் அதற்கும் கீழ்ப்படியத் தயாராயிருக்கிறேன்" என்றார்.

கைகேயி வஞ்சகியாக இருந்தபோதிலும். அவளது வரபலத்தினாலன்றோ இராமன் காட்டிற்குச் சென்று துட்டர் களை வென்று, சிட்டர்களுக்கு உதவினர். கைகேயியைப்போல் நாட்டில் தோன்றியுள்ள சுயமரியாதைக் கட்சிக்கு என் நன்றி உரியதாகுக!

கைகேயி இல்லாவிடில் இராமாயணம் நடைபெறுமா? அதுபோல் இந்த அவலக்கட்சி தோன்றாவிட்டால் நம்வர்கள் விழித்துக்கொள்வார்களா? ஒழுக்கமற்ற மேல்நாட்டு நூல்களை யும், நாவல்களையும், படிப்பவர்களே எக்கட்சியில் மிகுந்திருக் கின்றனர்; கடவுளில்லையென்று அவர்கள் சொல்வதுமன்றி பள்ளிக்கூடத்தில் படிக்கும் பால்மணம் மாறாத சிறுவர்களிடத் திலும், கலாசாலை மாணவர்களிடத்திலும், தங்கள் கட்சியைப் புகுத்திவருகின்றார்கள் யௌவனர்களை இப்படிக் கெடுப்பது நன்மையாகுமா? அக் கட்சியை ஆதரிப்பவர்களில் பெரும்பான் மையோருக்குத் தமிழ் நூல்களைப்பற்றியும், தமிழ் சமயத்தின் அருமையைப்பற்றியும் ஒன்றுமே தெரியாது. அவர்கள் கூறு கின்ற வார்த்தைக்கும் மதிப்பிருப்பதாகத் தெரியவில்லை.

இராமாயணத்தை ஒவ்வொருவரும் படியுங்கள். அதிலுள்ள அரிய நீதிகளேயும், கவியின் சுவையையும் நன்குணருங்கள். மகாத்மா காந்தியடிகளும் செல்லுகின்ற இடமெல்லாம் பெண்களுக்குச் சீதையின் வாழ்க்கையைப் பின்பற்றுங்களென்றுதான் கூறுகிருர்.

அப்படிப்பட்ட நூலை ஒரு கூட்டத்தவர் குறை கூறுவதால் அது இறந்துவிடுமோ? மானம் பெரிது. கற்புமானத்தைக் காட்டிலும் பெரிது என்பவைகளே விளக்கிய சீதாபிராட்டியின் பெருமையை உற்று நோக்குங்கள்! பரதன் உத்தமன். அவன் குணத்திற் கீடாக ஒருவருமே யில்லை. நாட்டையடைந்தும் பரதன் ஏன் அதை ஆள விரும்பவில்லை? இந்த ஒரு காரியத்திலிருந்து அவரது குணத்தின் சிறப்பு விளங்கவில்லையா? தற்காலத்தில் இப்படிப்பட்ட அருங்குணம் வாய்ந்தவர் யார் இருக்கின்ருர்? ஆதலால், அரிய நீதிகளேப் போதிக்கும் இராமாயணத்தைப் படியுங்கள்! ஆஸ்திக சங்கத்தை ஆதரியுங்கள்!!

ஆஸ்திக சங்கத்தலைவரும்,

"தேசபந்து" ஆசிரியருமான சதாவதானம்

## திருவாளர். தெ. கிருஷ்ணஸ்வாமிப் பாவலர்

பேசியதாவது.

ஆஸ்திக இயக்கம் இதுபோழ்து நாட்டி லெங்கும் பரவ ஆரம்பித்துவிட்டது. எனது குருநாதன் செட்டியாரவர்களும், அம்மையா ரவர்களும் பேசிய பின் இராமாயணத்தின் சிறப்பைப்பற்றி யான் விரிவிரை நிகழ்த்த வேண்டிய அவசியமில்லை, இராமாயணத்தின் பெருமையும் அதிலுள்ள கவிகளின் பெருமையும் சிறப்பும் படித்த பேரறிவாளரேயன்றி படிக்காதவர்களறிவரோ? நம் நாட்டில் ஆடவர்களிடம் நாஸ்திக வாழ்க்கை பரவி வந்தபோதிலும் நமது அன்னை

மக்களிடத்தில் அது சிறிதும் இல்லை. அவர்களால்தான் தெய்வ பக்தியும், சமயப்பற்றும், ஆஸ்திகமும் அழியாம லிருந்துவருகின்றன. அவர்க ளில்லையேல் நம் நாட்டில் ஆஸ்திகமுமில்லை. இப்போது நாஸ்திகம் பேசுவோரவர்களது வீட்டிலும் நாஸ்திகம் செல்லவில்லையென்பதை நான் நன்கு அறிந்துகொண்டிருக்கிறேன். இராமசாமியார் தான் படிக்க வில்லையென்று சொல்லுகிறார். பகுத்தறிவுமட்டும் உண்டு என்று சொல்லுகிறார். இவரும் இவர் கட்சியினரும் சிறிதும் ஆராய்ச்சியின்றி இராமாயணத்தைப் பொய்க்கதை, இராமன் பேடி, சீதை விபசாரியென்று கூறுவதை நீங்கள் இன்னும் கேட்டுக்கொண்டிருக்க விரும்புகிறீர்களா? நம் நாட்டிலேயுள்ள குழந்தைகள்முதல் பெரியோர்கள் வரையிலும் இராமனின் சரித்திரத்தைப்பற்றி நன்கு அறிவர். இராமனது கதையைக் கேட்கும்பொழுது நம்மவர்களுக்கு எவ்வளவு பக்தியும் உணர்ச்சியும் ஏற்படுகின்றன? இப்படிப்பட்ட அரியநூலை இழித்துரைக்கின்றனர். ஈரோடு குழுவினர் ஞானமற்ற அறிவை நம்நாடு இதுவரையில் மதிக்கவில்லை. ஞானமற்ற பகுத்தறிவு கொண்டுள்ள அக் கட்சியின் சொல்லுக்கு நம் நாட்டவர் சிறிதும் செவிசாய்க்கப்போவதில்லை. அவர்கள் புரட்டுகளும் மோசங்களும் இப்பொழுது நன்கு விளங்கிவிட்டன. இவர்கள் சொல்லுவதொன்று செய்வதொன்றாக விருக்கின்றது. நமது நாட்டின் சமயத்தையோ அல்லது சமய நூற்களையோ அழிக்க இராமசாமிக் கூட்டத்தவரால் முடியாது. உலகத்தில் அநேக நாடுகளில் மதங்களும் வழக்க வொழுக்கங்களும் மாறிவிட்டன. ஆனால், நம் இந்தியாவின் சமயம் இதுவரையில் அழியாம லிருந்துவருகிறது. இதிலிருந்தே இந்திய நாகரீகத்தின் பெருமையும் இந்திய சமயத்தின் உயர்வும் நன்கு விளங்கவில்லையா? நமது பெரியார்கள் நம்மதத்தையும் அறிவையும் வளர்க்க அரும்பாடு பட்டிருக்கின்றனர். சமய நூல்களையும் தமிழ்

நூல்களையும் தங்கள் உயிர்போல் காத்துவந்தனர். இப்படியிருக்க இராமசாமியார் வகையார் தங்கள் மனம்போனபடியெல்லாம் பேசியும் எழுதியும், நமது சமயத்திற்கும், தமிழ் மொழிக்கும் கேடிழைக்க முன்வந்து விட்டனர்.

இராமாயணத்தில் வாய்மையும் சகோதர வாஞ்சையும் ததும்பி நிற்கின்றது. கைகேயின் கடுமையான கட்டளைகளைக் கேட்டும் இராமன் கலங்காமல் "பரதன் நாட்டையாள்வது எனக்குப் பூரண சம்மதமே, அவன் என்னுடன் பிறந்தவனன்றோ" என்று அவர் சொல்லி, சந்தோஷத்துடன் காடேகியதை நோக்குங்கால் உண்மையன்பும் சகோதர வாஞ்சையும் புலப்படவில்லையா?

இராவணன் யுத்தம் செய்து கொல்லுமுன்பே ராமன் தன்னைச் சரணடைந்த விபீஷணனுக்கு எந்த நிச்சயத்தைக் கொண்டு இலங்கைக்கு வேந்தனாக முடி சூட்டினார்? இராவணன் வலியிழந்து நிராயுதபாணியாய் நிற்கையில் நாளையாவது சீதையைக் கொண்டுவந்து விட்டுவிடு உன்னை மன்னித்து உன் நாட்டையும், உனக்களித்து உன்னையும் காக்கின்கின்றேன்" என்று எங்ஙனம் துணிந்துரைத்தார்? பதினான்கு வருடம் கழிந்துவிட்டதாலும் கோசலநாட்டரசுரிமை தனக்கு வரப்போவதாலும் ராவணன் சீதையைக் கொண்டுவந்துவிட்டு மன்னிப்புக் கேட்டுக்கொண்டால் அவனுக்கு இலங்கையையும், முன்பே தானிலங்கை வேந்தனென்று முடிசூட்டிய விபீஷணனுக்கு அக் கோசலநாட்டையும் அளித்துவிடலாமென்று எண்ணியே அங்ஙனம் கூறினர்.

சுயநலங் கருதாத தியாக புத்தியுடனும் அன்பரை ஆட்கொள்ளும் விசால மனத்துடனும் நிகரற்று விளங்கும் இரா

மனேயும், அவனின் சரித்திரமாகிய இராமாயணத்தையும் குறை கூறும் குழுவினர்க்குக் கண்கள்தானில்லேயென்று கருதினேன். காதுமில்லேபோலும்! ஆகையால், இவ்வரிய நூலே ஒவ்வொருவரும் ஊக்கத்துடன் படிப்பதோடு ஆஸ்திக சங்கத்தில் ஒவ்வொருவரும் அங்கத்தினராகச் சேர்ந்து அதை வலுப்படுத்தும்படிக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

ஸ்ரீமான்கள் சிவசங்கர முதலியார், காழி சுப்பிரமணியம், வேணுகோபால செட்டியார், முதலியோர் எல்லோரையும் ஆஸ்திக சங்கத்தில் சேரும்படி கேட்டுக்கொண்டார்கள்.

அக்கிராசனர் முடிவுரையுடன் கூட்டம் இனிது கலேந்தது.

[ இஃது சென்னே "சுதேசமித்திரன்" 24-4-1929-ல் இருந்து எடுக்கப்பட்டது ]

"நாடிய பொருள் கைகூடும் ஞானமும் புகழுமுண்டாகும்
வீடியல் வழியதாக்கும் வேரியங் கமலே நோக்கும்
நீடியவரக்கர் சேனே நீறுபட்டழியவாகை
சூடிய சிலே யிராமன் றோள்வலி கூறுவோர்க்கே."

" நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே
தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே
சென்மமு மரணமு மின்றித்தீருமே
இம்மையே ராம வென்றிரண்டெழுத்தினல் "

—கம்ப நாட்டாழ்வார் திருவாக்கு

# ஆஸ்திக் வாழ்க்கையை மேற்கொள்ளுங்கள் !



## அறிஞரின் அமுதமொழிகள்.

(திரு. கே. எஸ். மணியம் அவர்களின் மொழிபெயர்ப்பு.)

சென்னை "தேசபந்து"

(27-4-1929.) வாரப்பத்திரிகையிலிருந்து எடுக்கப்பட்டது.

பண்டைப் பெருமை வாய்ந்த நம்பாரத நாடு இன்னமும் உயிர் வாழ்கின்றதென்றால் அதற்குக் காரணம், அது ஆண்டவனையும் சமயம், பாரமார்த்திகம் என்னும் நிதிக்களஞ்சியங்களையும் விடாமற் பற்றிக் கொண்டிருப்பதே யாகும் இந்தியாவைக் கொல்ல முடியாது; அது மரணபயமென்பதே சிறிதுமில்லாதது நித்தியத்துவம் பெற்று விளங்குகின்றது. ஆன்மாவே அதற்குப் பின்பலமாயிருக்கும் வரையில், அதன் மக்கள் தாங்கள் பாரமார்த்திக வாழ்க்கையைக் கைவிடாதிருக்கும் வரையில் இந்தியா இப்படியே பிரகாசித்துக் கொண்டிருக்கும். இந்திய மக்கள் பிச்சைக்காரர்களாகவே யிருக்கலாம். என்றைக்கும் அவர்கள் வறுமையினாலும், பட்டினியாலும் பீடிக்கப் பட்டு ஆபாசமும் அழுக்கும் சூழ்ந்தவர்களாய் வாழலாம். ஆனால் எக்காரணத்தைக் கொண்டும் அவர்கள் தங்கள் இறைவனையும் பண்டைப்பெருமை வாய்ந்த சமயத்தையும் கைவிட வேண்டாம், தாங்கள் ரிஷிகள், ஞானிகள் இவர்களுடைய வம்சத்தில் தோன்றியவர்கள் என்பதையும் மறக்கவேண்டாம்.''

"நமக்குப் பிறப்பளித்துள்ள இந்தப் பாரத நாடு உலகுக்கே விடுதலை உபதேசத்தைச் செய்த நாடாகும். விடுதலையடைந்த சிறந்த ஞானிகளும் துறவிகளும் வாழ்ந்த நாடாகும். இதை நாம் எப்பொழுதும் மனதிலிருத்திக்கொள்வோமாயின்

நமது செயல்களெல்லாம் தூய்மை பொருந்தியனவாயிருக்கும். அப்பொழுது நம்மை இந்தியர்கள் என்று பெருமையுடன் அழைத்துக்கொள்ள நாம் தகுதியுடையவர்களாவோம்.

—ஸ்வாமி விவேகானந்தர்

"நன்மைக்காக உயிர் வாழ்; ஆனால் நன்மையைப் போல் தோன்றி உன்னைத் தீமையாகிய படுகுழியில் வீழ்த்தக் கூடிய மாயவலைகளிடத்து எச்சரிக்கையாயிரு. உன்னுடைய நன்மையும் க்ஷேமமும் நீ உன் சகோதர மனிதர்களிடம் ஒற்றுமையாக நடந்து கொள்வதைப் பொறுத் திருக்கின்றது. ஜனங்களின் ஒற்றுமைக்குத் தீங்குசெய்யக்கூடியனவெல்லாம் தீமையாகும். எனவே உனக்கு அளிக்கப்பட்டிருக்கின்ற நன்மையை நீ பாழாக்கிக் கொள்ளாதே."

—ருஷ்யஞானி டால்ஸ்டாய்

"தற்காலம் நமது பாரதநாடு ஆண்மைத்தனமற்றுக் கிடந்தாலும், தன்மதிப்பையும், சுயமரியாதையையும் இந்தியர்கள் இழந்து விடவில்லையென்பதை நாம் பிரத்தியட்சத்தில் நன்கு விளக்கிக் காட்டிவிடவேண்டும் மதத்திற்காகவும், மதத்தின் பெருமையைக் காப்பதற்காகவும் உயிரையும் இழக்க நாம் தயாராக இருக்கின்றோம். மதத்தைக் காப்பதே நமது முக்கியமான லட்சியம்"

"இந்திய நாகரிகத்தின் இயற்கை தர்மத்தை உயர்த்துவது; ஆனால் மேல்நாட்டு நாகரிகத்தின் இயற்கை அதர்மத்தை வளர்ப்பதாகும். பிந்தியதில் கடவுளே யில்லை. இந்திய நாகரிகம் கடவுள்மீது நம்பிக்கையை அடிப்படையாகக் கொண்டது இதை அறிந்து நம்பிக்கையுடன் இந்திய நாகரிகத்தைப் பின்பற்றி ஒழுகுவதே இந்தியாமீது உண்மையில் அன்பு செலுத்தும் ஒவ்வொருவருக்கும் இன்றியமையாத கடமையாகும்."

—மகாத்மா காந்தி

"சமயத் தொடர்பு அற்ற அரசியலால் நமது நாட்டுக்கு யாதொரு பயனும் ஏற்படாது."

—லோகமான்ய திலகர்

---

புவனேஸ்வரி அச்சுக்கூடம் சென்னை.

உ

கடவுள்துணை

# கோயில் எதற்கு?

ஆஸ்தீக சங்கத்தலைவர் உயர்திருவாளர் சதாவதானம்-
தெ. கிருஷ்ணசாமிப் பாவலர் அவர்களை ஆசிரியரா
கக்கொண்டு சென்னைமா நகரத்தில்
நடைபெறும் தேசபந்து வாரப்பத்திரிகையில்
(23-3-29) நாரதர் எழுதுகிறார்.

வாரும் நாரதரே! காசி சென்றீரே? என்ன விசேஷம்? சௌக்கியமா?

என்னப்பா! உன் கேள்விகள் தலை கீழாக இருக்கின்றனவே? இதிலும் சீர்திருத்தம் போலும்! என் நண்பர் ஒருவர் தன் நண்பரைப் பார்க்கச் சென்றார். அவர் இவரை எங்கே வந்தாய்? என்று கேட்டார்? ஒன்று மில்லை-...... என்று பதில் சொல்ல ஆரம்பித்தார். இதைக் கண்டதும் துரை வீட்டு......கு வருவது போலக் கோபம் வந்தது. 'ஒன்று மில்லையே? என் வந்தாய்? போ! போ! போ! உன் இந்தியப் புத்திபையா காட்டுகிறாய்?' என்று உறுமினார். என் நண்பர் சாது. அதற்காகப் பேசத்தெரியா தென்று நினைக்கவேண்டாம்.

" இந்தியனுக்கு இந்திய புத்திதான்; தாங்கள் வெள்ளையனுக்குப் பிறந்தவரோ?" என்று ஒரு சவக்கடி கொடுத்து வெளியில் வந்தார்.

எப்பொழுது பார்த்தாலும் உனக்கு ஒரு கதை என்று இவர் முணுமுணுக்கிறார். நான் என்ன செய்வது? பழைய காலத்து மனுஷ்யன். அஃதிருக்கட்டும். உன் கேள்விக்

குப் பதில் சொல்லுகிறேன். அப்பனே! காசி போய் வந்தவரைக் கண்டாலும் பிணி தீரும். பாபம், சோம்பல், நோய் என்றழைக்கப்படும் சகல பிணிகளும் தீரும். பகீரதன் தன் முன்னோரைக் கரையேற்ற எவ்வளவோ ஆண்டு கடுந்தவமியற்றிக் கொணர்ந்த கங்காதேவி ஆநந்தமாய் ஓடும் காசிமாநகரில் ஒரு நாளிருக்கவும் ஒரு கோடி ஜன்மம் எடுத்துத் தவமியற்றி யிருக்கவேண்டும். தானும் பூலோகத்திற்கு வருவதா என்று இறுமாப்புடன் அண்டசராசரங்களையுமழித்துவிடுவதென்ற உறுதியுடன் ஓடிவர, தன் ஜடையாகிற புல்லின் நுனியில் பனித்திவலை போல் பார்வதீ நாயகன் செய்ய, அந்தோ! எவ்வளவோ ஆண்டு தவமியற்றிக் கொணர்ந்த கங்கையைக் காணோமே என்று திகைத்துத் திரும்ப, கைலாயநாதனைக் கண்டு களிகூர்ந்து பல்லாண்டு பாடித் துதித்து வந்தான் பகீரதன். அங்கு ஒரு முனிவர் மூக்கைப் பிடித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தார். தான் வரும்பொழுது இந்த வீங்கல் பீத்தக் குடிசையில் என்ன தைரியமாய் உட்கார்ந்துகொண்டிருக்கிறது? என்று கோபாவேசத்துடன் அகம்பாவம் நிறைந்த அம்மன் ஒருதரம் முட்டிக்கொண்டும் அது பகீரதனுடைய நெடுநாள் தவசில் ஆறிவிட்டதால், குடிசையுடன் நிர்ப்பயமாய் உருட்டிக் கொண்டுபோக ஆரம்பித்தாள். கண்ணை விழித்துப் பார்த்தார் ஜஹ்னு; (அந்த முனிவர் பெயர் ;) ஞானதிருஷ்டியில் பார்த்தார். கங்கையின் இறுமாப்பை யடக்க நினைத்தார். அகஸ்திய மாமுனிவருடைய ஜாதியிற் பிறந்தோன் என்று அதனிடம் கூறினர். நூலியற்றவில்லை. பருத்தி நூலல்ல. புத்தகம். இலக்கணம் எழுதவில்லை. விந்திய மலையின் தலையைப் பிடித்து மகாவிஷ்ணு: பலியை அழுத்தியதுபோல் அழுத்திப் பாதலத்தில் அழுத்தியது போல அழுத்தவில்லை. பின் என்ன? அகஸ்தியர் ஆகாயத்திற்

கும் பூமிக்குமாக கட்டை விரலளவு பெரியமனிதர்-சமுத்திர ராஜன் இவரைக் கண்டதும் கேலியாகச் சிரித்தான். அச்யு தாயநம: என்ருர். சமுத்திரம் இருந்தவிடம் தெரியவில்லை. பாவம்! அந்த சமாசாரம் கங்கைக்குத் தெரியாது. பீமசேனன் நஹுஷன் வயிற்றில் என்னடா? வழியைக் காணேம். இந்த வீட்டிற்கு ஜன்னலே இல்லையே! பட்டிக்காட்டான் கட்டிய வீடாயிருக்கிறதே என்று ஆலோசனை செய்ததுபோலக் கங்கை செய்தாள். பகீரதன் திரும்பிப் பார்த்தான். 'ஹோ' என்ற சப்தத்துடன் ஆகாசத்திற்கும் பூமிக்குமாக மலைகளையும், காடுகளையும், யானைகளையும், யானைபோன்ற முதலைகளையும் அடித்துக்கொண்டு பின்னேடு ஓடிவந்த ஸுரநதியைக் காணேம். திகைத்தான், அழுதான், புரண்டான். 'ஆண்டாண்டுதோறும் அழுது புரண்டாலு மாண்டார் வருவரோ? அங்கு ஒரு எலும்புக் கூடு, வெள்ளியால் பண்ணிய தாடியை உருவிக்கொண்டு உட்கார்ந்திருந்தது. கிட்ட நெருங்கினுன். அது உயிருள்ள ஒரு முனி. புன்னகை பூத்த மதிவதனத்தைக் கண்டான். பாத சாலங்களில் விழுந்தான். தன் வரலாற்றைத் தெரிவித்து அநுக்கிரகம் செய்யும்படி பலவாறு வேண்டினுன். பிறகு முனிவர் மனமிரங்கிக் காதுவழியாக ஓடிப்போ என்று அதட்டினுர். இவ்வளவு பிரயத்தினம் செய்து கொண்டுவந்த கங்கை அவனுடைய முன்னேரை மாத்திரமல்ல, எல்லா மாந்தரையும் கரையேற்றத் தயாராய் இன்று மங்கு ஓடிக்கொண்டிருக்கிறது. அதனுல்தான் பகீரதப் பிரயத்தினம் என்று சொல்லப்படுகிறது. தானெடுத்த காரியத்தை முடித்துத் தீரவேண்டும் என்ற ஒரே எண்ணமுள்ள பகீரதன் எவ்வளவோ இடையூறு வந்தும் பயந்தானில்லை. இது திருவள்ளுவருக்கும் தெரியும். ஆகையாற்ருன் கூறுகிருர்.

" எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்
எண்ணுவ மென்ப திழுக்கு "

அந்தக் கங்கைக் கரையில் பெரியோர்கள் தவம் செய்வதும் எம்பெருமான் எழுந்தருளி யிருப்பதும், பக்த கோடிகள் அவரைச் சேவிப்பதும், ஆயிரங் கண்ணிருந்து பார்க்க வேண்டும். உடனே இந்திரனை இரவல் கேட்கலாம் என்று எண்ணினேன்...

ஓய் ! நாரதரே ! கோவிலேது ? குளமேது ? ஏதோ கதை அளக்கிறீரே. போனால்போகிறது,' கதை சொல்கிறீரே என்றல்ல—வா சும்மாயிருந்தேன். ஒரு கல்லைவைத்து அதைச் சுவாமி என்று கூறிக் கூத்தாடித் தேங்காயை யுடைத்துப் பாமர ஜனங்களை ஏமாற்றிப் பார்ப்பான் பிழைக்க வழியல்லவா ?

குழந்தாய் ! புத்தியிலும், வயதிலும், அநுபவத்திலும் குழந்தாய்! சற்றுப் பொறு. அளந்து பேசி அறிவுடையோன் எனப் பெயரெடு. நான் எவ்வளவோ படித்தும், அதிகப் பிரசங்கியா யிருந்து கலகம் செய்வதால் என்னை எவ்வளவு பேர் முதலெடுப்பில் தூற்றுகின்றனர். பிறகு விளையும் இன்பத்தைக் கண்டு பின் புத்தி வந்து வாழ்த்துவதிருக்கட்டும். நீ கடவுளையும் பெரியோரையும் நிந்தித்துப் பாவத்திற்கு ஆள் ஆகாதே. பாவம் ஏதென்று கூறி நரகத்திலே விழாதே. கடவுள், கோவிலென்ற விஷயத்தைக் கேட்டுவிட்டாய். பெரிய விஷயம்; ரஸமான விஷயம். சாப்பிட்டு விட்டாயா? பசிக்கிறதென் றுரைத்து நடுவில் எழுந்து போகக் கூடாது.

அப்படியானால் சற்று இரும். ஒரு பொடி மட்டைவாங்கி வருகிறேன். பசியையும் பொறுப்பேன். பொடி யில்லாவிட்டாலோ, அம்மம்மா: ஒரு நிமிஷமும் என்னால் தாங்க முடியாது

தம்பி ! அப்படியே எனக்கும் ஒரு மட்டை.

என்ன ஐயா ! எல்லாம் விசித்திரமாயிருக்கிறது. பொடியும் போடுகிறீரா? உமக்கு எல்லாக் கெட்ட பழக்கமும் உண்டு போலும் !

இப்பொழுதுதானே சொன்னேன். அதற்குள் மறந்து விட்டாயே. பேசுவதை நிறுத்து; அளந்து பேசு. போதாத காலம் எனக்கு ஒரு துர்ப்பழக்கம் வந்துவிட்டது. முன் காலத்தில் அரசர்களும், முனிவர்களும் ஆசார உபசாரம் செய்து எதிர்கொண் டழைத்து பாதயம் (காலலம்ப ஜலம்), அர்க்யம் (ஆசமனம் செய்ய ஜலம்), மதுபர்க்கம் (பழம் தேன் முதலியன) கொடுத்து உபசரித்தனர். நடுவில் பழைய சாதம் ஏற்பட்டிருந்தது. இப்பொழுது காபி, டீ, பொடி, சுருட்டு, விஸ்கி ஏற்பட்டன. இந்தச் சனியன் காபி கசக்கிறது. குடித்த உடன் வயிற்றைப் பிரட்டுகிறது. நல்லவேளையாக ஆளைப் பிரட்டவில்லை. விஸ்கிபுஸ்ஸென்கிறது; பயமாயிருக்கிறது; புட்டி தலையைச் சீவிக் கொடுக்கின்றனர். ஒரு கண்ணாடித்தூள் காலில் குத்தி ஆறு மாதம் ஆஸ்பத்திரிக்குப்போனேன். நாக்கிலே குத்தினுல் செத்தே போவேன். சிகரெட்டு நுனியில் நெருப்பு இருக்கிறது. அது நாக்கையும மூக்கையும் சுட்டுவிடும். பொடி பரவாயில்லை.

எங்கப்பா பிரம்மாவின் பத்திரத்தால் (இலையால்) செய்வதாம். இதையும் மறுத்தால் மரியாதை யிராது என்று சம்மதித்தேன். செலவும் அதிகம் இல்லை ஒரு தப்பிடிக்குப் பொடி தருவான். காபீ, டி, அல்லது விஸ்கி தம்பிடிக்குக் கேட்டால் கன்னத்தைத்தொட்டுப்பார்க்கவேண்டியதுதான். கடைசியில் இந்தக் காலத்து மனுஷ்ய சகவாஸம் கெட்ட பழக்கம் ஏற்பட்டுவிட்டது. விட முடியவில்லை.

"தோட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்."

குழந்தைமுதல் நல்லுபதேசத்தினாலும் நல்லினஞ் சேர்தலாலுமே நற் பழக்கங்களும் புகழு முண்டாம். பழகுவதால் சாத்திய மாகாதது எது? கல்வி யறிவு படைத்த நற்ருயின் பேருபதேசத்தால் பல வீரரையும் பெற்றது நம் நாடு. குருகுல வாசத்தால் நல்ல பழக்கம் வாய்ந்து சிறந்து விளங்கிய முன்னோர் கற்றவன் என்றாலே நல்லவன் என்ற பொருளை அதற் கீந்தனர். அவர்களுக்கு அரசனுடைய அவைகளிலும் ஜனசமூகங்களிலும் மரியாதை யிருந்தது.

"கற்றோர்க்குச் சென்றவிட மெல்லாஞ் சிறப்பு."

என்ற பழமொழி பிறந்தது. யுத்த காலத்தில் சாஸ்திராப்பிபாசமும், பெரியவனாகி நல்லுபதேசம் பெற்று நல்லவனாக விரும்புவதும், வீடு தீப்பற்றி பெரியும்பொழுது கிணறு தோண்டுவது மொன்று. ஒரு கோவில் அர்ச்சகர் ஊருக்குப் போகவேண்டியிருந்தது. தன் பிள்ளையை விளித்து நாளை வெள்ளிக்கிழமை. பக்தகோடிகள் சேவை செய்ய வரும்; வரும்படியை விடாதே என்று கூறிப்போந்தனர். மைந்தன் கோவிலுக்கு வந்தான். ஒரு கிழ அம்மா பழந் தேங்காய்களுடன் கோவிலுக்கு வந்தாள். அர்ச்சனை செய்தார். முதலில் மணியை அடித்துக் கற்பூரஹாராத்தி சுவாமிக்குக் காட்டினார். குருக்கள் குழந்தை. அம்மன் கோவிலுக்குச் சென்றதும் அம்மா ஒரே சமயத்தில் மணி அடித்துக் கற்பூர ஹாராத்தி செய்யவேண்டும் என்று விரும்பினார். குழந்தை கன்கோஜி மறுப்பது அனுசிதம் என்று நினைந்து மணியை இடது கையிலும் தட்டை வலது கையிலும் வைத்துக்கொண்டு, கால்முதல் தலைவரை ஜோதியைக் காட்டக் கருதிக்கொண்டு போனார். ஆனல், மணியடிக்கமுடிய

வில்லை; மணி பெரிய மணி. அதனால் அம்மன்பேரில் ஒரு மொட்டு மொட்டினர். பிறகு மணியை அடிப்பதுபோல தட்டையும் ஆட்டினர். கைவழுக்கிக் கீழே போட்டார் அது எதனல்? பழக்க மின்மையினல் ஆகவே பழக்கம் அவசியம் எத்தகைபபழக்கம் ஜனங்களுக்கு நன்மை புரியும் பழக்கம். அழியாப் புகழையும் எல்லையிலாப் பேரின்பத்தையும் அளிக்கவல்ல நற்பழக்கம். நன்மைசெய்வதற்கு நிமித்தமாய் பழக்கம். இது நன்மை இது தீமை என்று பகுத்தறிவதாற்றான் மாந்தர் விலங்கைவிட உயர்ந்தவர் ஆகின்றனர். இத்தகைய நல்ல பழக்கம் ஏற்படவே, மிருகத்தன்மை நம்மை விட்டகலவே, அழியாப் புகழையும் பேரின்பத்தை நாடவே நமது முன்னோர் கோவில்களை ஏற்படுத்தியுள்ளார்கள். சோழியன் சிண்டு சும்மா ஆடாது. 'மேயோ' நமது நாடு மேல் நாட்டினரின் பழக்கத்தை ஏற்க விரும்பி ஏமாறுவதைக் கண்டுதான் நம்மிடமுள்ள சாக்கடைச் சேற்றைவாரித் தன் மேல் பூசிக்கொண்டு இதுதான் இந்தியா, இந்தியா இப்படித்தான் நாறும்' என்று கூறிக்கொண்டு அரங்க மேடைகளில் காட்டியாடுகிறள். உண்மையில் நமது தேசத்துச்சாக்கடை நாற்றதையும் மீறிக்கொண்டு அவள் தேசத்துப் பூத்தோட்ட நாற்றமே வெளிக்கிளம்ப, அது இந்திய சாக்கடை நாற்றம் என அறிவு கெட்ட பலர் நம்புகின்றனர்.

ஒருவன் வழி நடந்தான் பகல்வேளை. வெய்யில் ஜாஸ்தி. களைப்பாற ஒரு ஆல மரத்தடியில் படுத்துறங்கினன். பிறகு எழுந்து சென்றன் மறுநாள் அந்த ஆலமரத்தில் பிசாசிருப்பதாகக் கூறினர். ஐயோ! அந்த மடையன் அதை நம்பினன். தனதனுபவத்தையும் நம்ப அவனுக்குப் புத்தி யில்லை. அதுபோல் நாற்பது வயதாகியும் கன்னியான (நடத்தைக்கு நாம் உத்தரவாதியல்ல, பெயருக்கு உறுதி கூறுகிறேம்) ஒரு

மடந்தை கூறியதை நம்பும் புத்திசாலிகள் பலரைப் பிரமன் ஆலமரத்தானைப் பார்த்துச் சிருஷ்டித்தான்.

இந்தச் சாக்கடை எழுதிய புத்தகம் பார்லிமெண்டு அங்கத்தினருக்கு இலவசமாய்ப் பறிமாறப்பட்டதாம். இன்னும் எவ்வளவோ வதந்திகள். பல வாஸ்தவத்தில் உண்மைகளே நானதைச் சொல்லவேண்டாம். நமது இந்தியாவில் பெரிய புலவர்கள் மூளை, தேகம், அநுபவம் இவைகளி னுழைப்பால் அபூர்வமாய், மிக மேன்மை பொருந்தியதாய் எழுதும் நூற்களை வாங்கி வழங்கலாகாதா? அதனால் அந்த அங்கத்தினர்கள் இகத்திலும் பரத்திலும் சுகமெய்துவரே புலவருக்கும் உத்ஸாகம் பிறந்து இன்னும் பல நூல்கள் எழுதுவரே. வடமொழியில் பத்திரிகைகள் பிறப்பதும் இறப்பதுமா யிருக்கின்றன வடமொழியை மிகக் கொண்டாடுகின்றனர். சாக்கடை நாற்றத்தை அனுபவிக்க உதவிசெய்த பிருகஸ்பதிகள் உத்யான பத்திரிகை என்ற வடமொழியில் வெளிவரும் மாத சஞ்சிகையை—ஒரே ரூபாய் சந்தாவுள்ள மாத சஞ்சிகையை—திருவையாறு என்று கூறப்படும் ஊரிலிருந்து வெளிவரும். இதை ஐந்து ஆறுகளின் மத்தியில் விளங்கும் உன்னதமான உத்யானத்தில் (பூத்தோட்டத்தில்) வீசும் வாசனையைக் கிரஹித்து வெளிவரும். தென்னாட்டில் இருக்கும் ஒரே பத்திரிகையை வாங்கி படித்து அந்த நாற்றத்திலிருந்து சற்றுக்காப்பாற்றமுயறலாகாதா? அதற்குச் செலவழி.

குழந்தாய்! உன் சிறுபிள்ளைத்தனத்தைக் காட்டாதே என்று பலதரம் கூறினும் உன் வழக்கம்போகவில்லை. பிதற்றுகிறாய் அதிகப் பிரசிங்கத்தனம் செய்கிறாய். சற்றுப் பொறு. நானே எல்லாவற்றையும் கூறுகிறேன். நீ கிணற்றுத் தவளை. நான் நாடோடி. பல ஊர், பல மதம், பல ஆராய்ச்சி எனக்குத்தெரியும்.

நீ சற்றுப் புத்தியுள்ளவன். பிறர் கூறுவதை முழுவதும் கேட்டு ஆரஅமர யோசனை செய்து எது நல்லது எது கெட்டது என்று அறியக்கூடியவன். ஆதலாற்றான் உன்னிடம் நான் தயை கூர்ந்து இவ்வளவு தாராளமாய்ப் பேசுவது.

ஒரு கிணற்றில் தவளை ஒன்று ரொம்பநாளாய் வசித்து வந்தது. அங்குச் சமுத்திரத்திலிருந்து தவளைஒன்று வந்தது. கிணற்றுத் தவளை குசலப்பிரச்னம் செய்து (க்ஷேமம் விசாரித்து) எங்கிருந்து வருகிறாய் ? என்றது. ‘ சமுத்திரத்திலிருந்து’ அது எவ்வளவு பெரிது? ‘அது ரொம்ப பெரிது.’ ஒரு எழும்ப எழும்பி ஒரு அடி தாண்டிக் குதித்து இவ்வளவு பெரிதாயிருக்குமா? இல்லை இன்னும் பெரிது.’ மூன்றடி தாண்டிக் குதித்து இவ்வளவுபெரிதா? என்றது கிணற்றுத் தவளை இல்லை இன்னும் பெரிது என்று பதில் அளித்தது சமுத்திரத்தவளை கிணற்றை ஒரு சுற்றுச் சுற்றிவந்து இவ்வளவு பெரியதா? என வினவிற்று. இன்னும் பெரிதானது என்றது கடற்றவளை. வந்துவிட்டது.கோபம். சேய்! பொய்யனே. உலகை ஏமாற்றுகிறாய். இதைவிடப் பெரிதுமுண்டா?ஓடிப்போ!கழுதையே! நின்றாயானால் கழுத்தை முறிப்பேன் என்று திட்டிற்று. கிழத்தவளை குட்டித்தவளைகள் ஆமாம் ஆமாம் என்றன. பார்த்தது,யோசித்தது. அந்தோ! நிர்வாணதேசத்தில் கோவணம் கட்டியவன் பைத்தியக்காரன் என்று இந்த அறிவிலிகளுடைய நடுவிலிருந்து ஓடுவதே சிறந்த வழி என்று தீர்மானித்தது.

நீ அத்தகையனல்லன். கோபம் வராது. ஒருக்கால் இதைவிடப் பெரிய சமுத்திரம் ஒன்றிருக்கலாம் என்றுநினைப்பாய். ஆகையால், வாய்ப்பதட்டமில்லாமல் காது கொடுத்துக் கேட்டாய்.

ஆரியர்கள் வேறு திராவிடர்கள் வேறுஎன்றுசொல்வது பிசகு என்பார் ஒரு சாரார். அதற்கு ஒவ்வொன்றாய்க் காரணம் கூறுகிறேன். ஆழிசூழ் இவ்வுலகில் ஒவ்வோரிடத்திலும் ஆதியில் மனிதர் வசித்தே வந்தனர். அஃதேபோல இந்தியா என்ற நமது புண்ணிய பரதகண்டத்திலும், நாடு சீர்திருத்தப்படாதிருந்தபோதிலும் வசித்தே வந்தனர் மனிதர்கள். அவர்கள் மிலேச்சர்கள் அல்லது இராக்கதர்கள் என்று அழைக்கப்பட்டனர். பிறகு துரேனியர் இந்தியாவில் நுழைந்து மிலேச்சர்களை வென்று நாட்டை யாண்டுவந்தனர். பிறகு ஆரியர் நுழைந்து ஜயித்தனர் என்பது ஒருவகுப்பாரின் கொள்கை. இந்தக் கொள்கையை ஏற்றுத் தாம் தூம் என்று குதிப்பவரோடு தன்னை யறியாமற் சேர்ந்து தாண்டவமாடுகிறாய். அப்படியே வைத்துப் பேசுவோம். அக்காலத்திருந்த இராக்ஷதர்கள் எங்கே? திராவிட' எங்கே? தீண்டாத வகுப்பினர் எனக்கருதிவரும் ஆதித் திராவிடர்களைத் திராவிடர்கள் என்று வைத்துக்கொள்வோம். திராவிடர்கள் இந்தியாவில் நுழைந்துயுத்தம்செய்து மிலேச்சர்களை வென்று ராஜ்யம் ஆண்டவரன்றோ? அன்னவர் ஆரியர்தங்களைத் தீண்டாதார் என்று வெறுத்துத் தூர விலக்கி வைப்பதைச் சகிப்பது முடியுமா!' காட்டிலும், மலையிலும், ஆரியர் பிரவேசிக்க முடியாத இடத்திலும் சென்று தங்களை வலுப்படுத்திச் சுதந்திர வீரர்களாகவிளங்குவரா? அடிமைப்பட்டுத் தீண்டாதவன் என ஊருக்குவெளியில் விலக்கி வைக்க ஒருப்படுவரா? இரண்டொருவர் சம்மதித்தாலும் எல்லோரும் சம்மதிப்பது முயற்கொம்புதான். ஒரு சிலர் ஆரியர் சொல்வதைக் கேட்டுநடக்கச் சம்மதிக்கப் பிறர்வேறு வகையின்றி அவ்விதமிருக்க ஒத்துக்கொள்ளவும் மாட்டார்.

தன்னுடன் சரிசமமாய் வாழ்ந்த கோழைகளான உற்றாரும் உறவினரும் ஜயித்தவர்களுடன் சேர்ந்து மேல் ஜாதி

யாக விளங்க, அத்தகைய அடிமை வாழ்வை ஏற்க மறுத்த வீரர்கள் தீண்டாதவராக இருக்க ஒருக்காலும் சம்மதிக்க மாட்டார்கள். ஆகையால், இந்த ஊகம் துடப்பக்கட்டையின் நுனிதான்.

திராவிடரில் சிலர் ஆரியருடன் சேர்ந்து சூத்திரர்—நாயகருடைய ஆராய்ச்சிப்படி தேவடியாள் குழவிகள்—என்ற பட்டத்துடன் வாழ்ந்தனர் என்பதும் பகற்கனவு. சரித்திரம் இல்லாத விடத்தில் நுழைந்து கண்ணைக்கட்டிக் காட்டில் விட்டவிடத்தில் குருடர்கள் யானை பார்த்ததுபோல ஏதோ ஒன்றைக் கண்டு சண்டை போடவேண்டாம். இருட்டில் போய் முட்டிக்கொண்டு தலையில் கட்டி புறப்படவேண்டாம். வெளிச்சத்திற்கு வருவோம்.

மஹாநந்தி சூத்திரஸ்திரீயினிடம் பிள்ளைகளைப் பெற்று ராஜ்யம் ஆண்டான். அவனுக்குப் பிராமணன் மந்திரி. முரை என்ற சூத்திர ஸ்திரீக்கு சந்திரகுப்தன் பிறந்தான். அவனுக்கு சாணக்யன் என்ற பார்ப்பனன் உதவி செய்தான். கிரேக்கப் பெண்ணைச் சந்திரகுப்தன் மணந்தான். அவன் பிள்ளை பிந்துசாரன் பார்ப்பனத்தியை மணந்தான். அசோகன் பிறந்தான். இது கதையல்ல. தக்க ஆதாரங்களுடன் கூடிய சரித்திரம். இதை நாயகர் ஆராய்ச்சியோடு ஒத்திட்டுப் பார்ப்போம்.

தேவடியாள் பெண்ணை ராஜா மணந்து பட்டமகிஷியாக்குவது. அவனுக்கு ஏதோ ஒரு தேசத்துப் பெண் வயிற்றில் பிறந்து வளர்ந்த தேவடியாள் வர்க்கத்தைச் சேர்ந்த ஒருவனைப் பார்ப்பனத்தி மணக்க முடியுமா? அசோகனுக்குப் பிறகு கொடுங்கோல் செலுத்திய காஷ்மீர அரசனை வேதியர் தபோ பலத்தால் ராஜ்பத்தைத் துறக்கச் செய்ததாக ரராஜ தரங்கிணி கூறும். தபோபலம் என்பதை 'துஷ்யது துர்ஜனஃ'

என்ற பழமொழிப்படி சூழ்ச்சியால் என்று கூறுவோம் அந்தச் சூழ்ச்சி எங்குப் போயிற்று? சாயவில்லை என்று கூறலாம். பிந்துசாரனுடைய தகப்பன் காலத்தில் சாய்ந்த சூழ்ச்சி பிள்ளை காலத்தில் விறைத்து நிற்பது ஆகாயக் கோட்டை. ஆகவே, இத்தகைய ஆராய்ச்சி உப்புக்கு முதவாத ஒழிந்த வேளையில் செல்லும் வியபசாரம்.

மற்றொரு சாரார், ஆதியில் ஜாதிபேதமில்லை. ஆரியர்கள் எத்துறையிலும் முற்போக்குள்ளவர். சிலர் கல்வியிலும்,சிலர் பகைவரை வேரறுப்பதிலும், பிறர் வியாபாரம் முதலிய துறைகளில் பொருளீட்டுவதிலும், ஏனையோர் அனைவருக்கும் உதவி புரிந்து— ஊழியம் செய்வதிலும்—காலத்தைக் கடத்தினர். ஒருவனே அதைவிட்டு இதிலும் இதைவிட்டு திஅலும் சென்றுவந்தான் அவன்“அக்கரைக்கு இக்கரை பச்சை” என்று ஓடும் மாட்டைப் பின் தொடர்ந்தான். காந்தத்துடன் சேர்ந்த இரும்பும் இரும்பை இழுக்கச் சக்தி எய்துவது போன்று மாட்டின் சக்தி இவனுக்கும், இவனைச் சேர்ந்த சிலருக்கும் வந்தது.

ஆயினும்,

“குளத்தளவே யாகுமாம் குணம்.”
“புலிக்குப்பிறந்தது யானையாகுமா ?”
“தோட்டிற்பழக்கம் சுடுகோடு மட்டும்”

இந்தப் பழமொழிகள்-நான் பின் சொல்லுபவைகளுக்கு வரிசையாகக் காரணங்கள். அது புரியாவிட்டால் நான் என்ன செய்வது! கல்விமான்-புள்ளிமான் அல்ல—அதைப்போன்ற ஒரு ஜந்துவுமல்ல—வித்தை கற்றவன், புலவன், பண்டிதன், அல்லது கற்றோன் வயிற்றிற் பிறந்தவன் கற்பதில் சூரனாக

வும், சூரன் வயிற்றிற் பிறந்தவன் சண்டை போடுவதில் கெட்டி யாகவும், செட்டி—வியாபாரம் முதலிய வழிகளில் திரண்ட திரவியம் தேடியதால், பண முள்ளவன் சிறந்தவன் என்ற உலக வழக்கப்படி—சிரேஷ்டி-உயர்ந்தவன் வயிற்றிற் பிறந்த வன் பணந் திரட்டுவதில் உழைப்பாளியாகவும், உழைப் பாளி—ஊழியம் செய்பவன் வயிற்றிற் பிறந்தவன் அந்தத் துறையில் மிகமிகச் சிறந்தவனாகவும் இருந்ததால் பெற் றோருடைய விருத்தியைத் தாங்களும் செய்யத் தொடங் கினர். பிறகு கொஞ்ச நாள் ஆனபிறகு, அதது ஒரு ஜாதியாகப் பிரிந்தது. நாழிகை யாகிவிட்டது, மற்றொரு நாள் வந்து ஜாதி விவாதத்தைப்பற்றி விரிவாகச் சொல்லு கிறேன். பாரதமும் இந்த சமாசாரத்தை - கர்மாவி னால் ஜாதியுண்டாயிற்று என்று கூறுகிறது. பகவத் கீதையை மஹாத்மா காந்தி சொல்வதுபோல ஊன்றிப் படி! உண்மை தெரியும். குணத்தினாலும் தொழிலினாலும் ஜாதியை உண் டாக்கினேன் என்று கூறுகிறார் கண்ணன். ஆதலால், திராவிட ரிலும் பார்ப்பனரும், ஆரியரிலும் சூத்திரரும் உண்டாயிருக் கவேண்டும். ஆகவே, திராவிடரெல்லோரும் சூத்திரரல்ல. இலங்கையில் திராவிடரைச் சேர்ந்த இராக்ஷதன் இராவணன் ஆண்டகாலத்தில் சிவன்கோவிலும் வேதமோதுவோரும் இரு ந்தனர் என்று ராமாயணம் படித்தால் தெரியவரும். வேதம் ஓதுவோர் வேதியர். திராவிடர்களை இழித்துக் கூற இராமாய ணம் எழுதப்பட்டதாக ஒரு சிலர் கூறுவதை ஒத்துக்கொ ண்டாலும் பரவாயில்லை. அந்தத்திராவிடர்களிலும் பிராமணர் இருந்தனர். இராவணன் சாமவேதத்தைப் பாடிப் பரமசிவ னைத் துதித்து வாளும் வரமும் பெற்றவன். அவன் சிவபூஜை செய்யும்பொழுதே கார்த்த வீரியன் தன் நாயகிகளோடு ஜலக் கிரீடை செய்து நதியை இரண்டாயிரம் கைகளாகிய மரங்க

ளால் அணை போட்டுப் பூஜைக்குவிக்கினம் செய்தான். சண்டை மூண்டது. அப்புறம் கதை நமக்கு வேண்டாம். எனவே, திரா விடர்கள் சிவபூஜை வேதமோதுதல் இரண்டையும் செய்து வந்தனர்என்பது வெள்ளிடைமலை நான் அதைக் கண்ணாலும் பார்த்திருக்கிறேன். அப்பா! இந்தக் காலத்தில் கண்ணாலும் கண்டதும் பொய், காதல் கேட்டதும் பொய், யுக்திகளுடன் ஆராத்திர விசாரித்தது மெய். அதனாற்றான் யுக்தி கூறுகிறேன். புரியாமற்போனால் கேள்! சந்தேக மிருந்தால் கேட்டுத் தெ ரிந்துகொள்! தன்னைவிடத் தெரிந்தவர் இல்லையென்று நினைப் பது மடமை.

"கற்றது கைம்மண்ணளவு கல்லாததுலகளவு"

இன்னும் என்தாய்-சரஸ்வதி-படித்து வருகிறாள். ஞாபக மிருக்கட்டும். இதனால்தான் மெக்டானல் போன்ற மேல் நாட்டு வடமொழிநூற் சரிதப் புலவரும் ஆரியர் சிவ பூஜை யையும் நாக பூஜையையும் திராவிடரிடமிருந்து கற்றுக் கொண்டனர் என்று கூறுகின்றார்கள் போலும் !

பீமசேனன்: இராக்ஷஸியைக் கல்யாணம் செய்துகொ ள்ள விரும்பினான். இதிலிருந்து பரஸ்பரம் மணத்தால் சம்பந் த மிருந்துவந்தது. ஆகவே, திராவிடரும் ஆரியரும் ஒன்றாக வே கலந்தபின் ஜாதி விவாகம் ஏற்பட்டது. ஆரியர் தங்க ளிட மிருந்த எட்டுவிதமான விவாக பேதத்தைத் திராவிடர் மத்தியில் புகுத்தியதாகத் தொல்காப்பியம் கூறும். அதாவது, திராவிடரும் ஆரியரும் ஒன்றாய்க் கலந்தனர். ஆகவே, இப்பொழுது திராவிடரையும் ஆரியரையும் பிரிப்பது கூடாத காரியம். திராவிடன் தனி ஜாதி என்று ஏற்றுக்கொள்வோம். தனியான மதநூலுண்டா? நீதிநூலுண்டா? திராவிட மதம் என்று ஒரு மதமும், திராவிட நீதி நூல் என்று ஒரு நூலு

மில்லே. ஒரே கடவுள் பாணிநியையும் அகத்தியரையும் அனுப்பி வடமொழி தென்மொழிகளே வகுக்கச்செய்தார். எனவே, இரு ஜாதியும் வேறல்ல. மதமும், நீதியு மில்லாமல் ஒரு ஜாதி வாழ்வது கூடாத காரியம். என் அன்னே மொழி தமிழை யிகழ்வதாக உன் களிமண் மூளேயின் சக்தியால் எண்ணிவிடாதே. அப்படி ஒரு ஜாதியிருந்து சிறந்து விளங்குமா? இதெல்லாம் ஊற்றுக்கு நிற்காத வாதம். உலகிலுள்ள எல்லா ஜாதியும் சங்கரஜாதிதான், அதாவது, பல ஜாதிகள் சேர்ந்ததுதான். அதாவது பலபல தேசத்தினர் பலபல தேசம் சென்று விவாஹம் முதலியவைகளால் ஒன்ருகி நிற்பவர்தான்.

இவ்விதமாக ஆரியரும் சரி, திராவிடரும் சரி, அவரவர் தம் முன்னேரும் சரி பின்னேரும் சரி ஆஸ்திகர்கள்—தெய்வம் உண்டென்று நம்பி ஆடிப்பாடித் துதித்து வந்தவர்கள். அப்பொழுது கோவில் இல்லே என்று சிலர் எது எப்படியிருந்தால் என்ன ? படித்தவர்களுக்கு அக்காலத்திலும் மதிப்புண்டு. இக்காலத்திலும் இனி எக்காலத்திலும் மதிப்புண்டு, அவர்கள் கடவுளே ஒப்புக்கொண்டனர். நிறைகுடம் தளும்பாது குறைகுடம் தடும் புடும் என்ற சப்தத்துடன். கடவுள் ஏதப்பா ? என்று கூத்தாடிற்று. இவ்வளவு பெரிய பிரம்மாண்டத்தைச் சிருஷ்டித்து, சூரிய சந்திராதிகளே உண்டுபண்ணி, மழை முதலியவைகளே யளித்து நம்மை ரக்ஷிப்பவன் நாமல்ல. அது இயற்கை ஆம், இயற்கைதான். அதாவது, தானுய் உண்டானது. அதை நம்மால் உண்டுபண்ண முடியாது. அந்த இயற்கையின் சக்தி அபரிதமானது, அளவிட முடியாதது. அது நமக்கு உதவி செய்கிறது. நன்றிமறிப்பது நன்றன்று. உய்வில்லே செய்நன்றி கொன்ற மகற்கு. உனக்குப் பசிக்கிறது. உண

வளித்தான் ஒருவன். அவனை நீ வாழ்த்தமாட்டாயா? நீ வாழ்த்தாது போனாலும் உன் வயிறு வாழ்த்தும் உன் பொடிமட்டை காலியாகிவிட்டது. விழித்தாய் பொடி போடும் சத்தம் கேட்டது அங்குத் திரும்பிப் பார்த்தாய். ஓஹோ! சார்! பட்டணம் பொடியா தயவு செய்து ஒரு சிட்டிகை கொடுங்கள் ஒன்று கேட்டாய். தயாள குண முள்ளவர். கொடுத்தார் வந்தனம் என்றுகூறுகிறாய். கர்ணன் என்று துதிக்கிறாய்.

அவ்விதம் இயற்கையை வாழ்த்தினர். அதன் அழகை வருணித்தனர். அதன் குணத்தைப் புகழ்ந்தனர். இயற்கை எத்தகையது; ஆதியில்லை, அந்தமில்லை. அளவிட முடியாத சக்தி வாய்ந்தது கடவுள்? அதுவும் அப்படியே இயற்கையைக் கடவுள் என்று துதித்தால் அதையேயன்றோ துதிக்கவேண்டும், கும்பிடவேண்டும்; அதற்குத் தேங்காய் உடைக்க வேண்டும்; கோவில்கட்டவேண்டும் என்று உனக்கு ஆக்ஷேபம் எழுகிறது; உன் மூஞ்சி (முகம்) யைப் பார்த்தால் தெரிகிறது அவசரப்படாதே. அந்த இயற்கைகள் என்னென்ன?

நீர், நெருப்பு, காற்று, பூமி முதலியன. இவைகளால் பிராணிகளுக்கு அளவிறந்த நன்மைகள் ஏற்படுகின்றன. எனவே, ஜனங்கள் இவைகளைத் துதிக்க ஆரம்பித்தனர். இதுவரை சொல்லிவந்தது மேல்நாட்டினரின் ஆராய்ச்சி. இதைக் கேட்டுத் துள்ளிக் குதிக்காதே! இதைக் கற்பிப்பதில் கொஞ்சம் புத்திசாலித்தனம் வேண்டும். அதை இது காட்டுகிறது. மேலே கவனிப்போம். இவைகளுக்கும் எனிவ்வளவு சக்தியிருக்கவேண்டும் என்று நமது முன்னோர் ஆஹாரம் நித்திரையிரண்டிலும் மனவமைதியடையாத பெரியோர்-தேகாதிரிக்தமான ஸூக்ஷ்ம வஸ்துக்களையும் கண்டு பிடிப்பதில் மனதைச்

செலுத்தினர். அவைகளே தர்சனங்கள். இவைகளைப் பார்த்தே மேல்நாட்டார், ஆத்மார்த்த வழியில் இந்தியரைவிடச் சிறந்தவர் வேறில்லை என்று கூறுகின்றனர். நிற்க: நீர், நெருப்பு முதலியவைகளுடைய அபார சக்திக்கு எங்கும் நிறைந்த சர்வ வல்லமையுள்ள அறிவானந்தன் பரம்பொருள் காரணம் என்று பெரியோர் கண்டுபிடித்தனர். குழந்தாய்! அவனே கடவுள். அவனைத் துதிப்பாயாக! கருணாமூர்த்தி கருணைபுரிந்து தன் ஸ்வரூபத்தை உனக்குக் காட்டுவான்.

அவரை எப்படி எவ்விதம் துதிக்கவேண்டும் என்பதைப்பற்றி இப்பொழுது சொல்ல நேரமில்லை. சுருதிகளும் (வேதங்களும்) ஸ்மிருதிகளும் என்னுடைய ஆணை என்று கூறுவதால் கடவுளின் குழந்தைகளான நாம் கடவுளின் ஆணைக்குக் கீழ்ப்படிந்து நடந்தால் நம்மிடம் பிரியமுண்டாகும். நமக்குப் பெற்றோர், சந்தோஷம் வந்தால், விரும்பியதையளிப்பதுபோலக் கேட்ட வரம் கொடுப்பார். அவருடைய பிரியத்தைச்சம்பாதிக்க ஒரே வார்த்தையில் சொல்லுகிறேன். அவரிடமும் அவர்தம் குழந்தைகளிடமும் மெய்யன்பு பூண்டொழுகவேண்டும். இதையே ஏசுநாதர் திருப்பித் திருப்பிக் கூறுகிறார். அன்பே சிவம் என்ற திருமந்திரமும் இதையே கூறும். அந்த விசாரம் பிறகு செய்வோம்.

கடவுளிடத்தில் எல்லோரும் பக்தி செய்து அவரது கருணைக்குப் பாத்திரமாகக் கோவில் இல்லாத விஷயத்தில் வேறு வழி கிடையாது. இது புத்தர் கற்றுக்கொடுத்த வழி என்று விமர்சகர் கூறுவர். இருக்கட்டும்.

கடவுளைச் சொல்லிப் பயமுறுத்திப் பாமர ஜனங்களைப் பாவ வழியில் செல்லாமல் தடுக்கப்படுகிறது என்று ஒருவர் சொன்னர். அது அவருடைய கற்பனை. அப்படிப் பயமுறுத்தி

ஒழுக்கத்தில் திருப்பச் சாமிவேண்டியதில்லை என்கிறாய். குழந்தை எவ்வளவோ சொல்லியும் கேளாமல் நெருப்பின் சமீபம் போகிறது. சுடும் என்று கூறுகிறோம். முதலில் அது சூடுபட்டிருந்தால் பயந்துகொண்டு பின் வருகிறது. அல்லது அடிப்பேன் என்று கூறிப் பய முறுத்துகிறோம். அது தப்பா? அட! அழுகிய மூளையே! உலக்கைக் கொழுந்தே!

பயமுறுத்தி நன்னெறியில் பாமர ஜனங்களை ஒழுகச் செய்வதும் ஒரு பிரயோஜனம் என்று அதற்குப் பொருள். வேறு பிரயோசன மில்லை என்று எந்த நூல் கூறியது? ஊத்தைவாயைத் திறக்காதே!

அரசாங்கச் சட்டங்கள் எதற்கு? தீயவழியிற் செல்பவனைப் பயமுறுத்தி நல்வழியை நாடச் செய்வதற்கே. அது பிசகென்று கூறினால் உன் மூளையைச் சிருஷ்டித்த பிரமனைத் தான் திட்டவேண்டும்.

ஒருவனைத் திருத்தப் பல வழிகள் இருப்பதாக வைத்துக் கொள்ளுவோம். அதில் கடவுள்: தீய வழியில் நடந்தால் கோபிப்பார் என்ற பயமுறுத்தலால் திருத்துவது கூடா தென்பதற்கு உனது அழுகிய மூளை காரணமோ?

எனக்கு நாழிகையாகிவிட்டது. மற்றொருநாள் வந்து விவரமாய்உன்சந்தேகங்களைப்போக்குகிறேன். எல்லாம் வல்ல இறைவனை இந்த மாய உலகில் அடிபட்டு ஏங்கித் தவிக்கும் நாம் ஒரு கவலையு மில்லாமல் மனதைச் செலுத்தி அரைக்ஷணமாவது தியானம் செய்யக் கோவில் அவசியம். உனது பால்யத்தையும் சினேகிதர்களையும்-கடந்தவர்கள்: இருக்கிறவர்கள் என்ற இருவித உற்றாரையும்-உனது அந்திய காலத்தையும்-மரணம் நிச்சயம் என்று நினைத்து யோசித்துப்பார். கடவுளிடம் பக்தி செலுத்துவாய். உன் பிடரியில் மரண மிருக்

கிறது இன்றைக்கோ ! நாளைக்கோ ! கடவுளிடம் மன்னிப்புக் கேட்காமல் அவரை வைது நரகத்தில் வீழாதே.

ஒருவருடைய மதத்தையும் முழுவதும் தெரியாமல் தெரிந்ததுபோல வீம்புக்குப் பேசிப் பல்லை யுடைத்துக்கொள் ளாதே. பெரியோர் சொல்வதைக் கேள்! மனிதனாய்ப் பிறக்க எவ்வளவோ புண்ணியம் செய்திருக்கவேண்டும். அவ்வளவு புண்ணியம் செய்தும் முக்தியடைய வழி தேடாமல் முன் னோரை நிந்தித்து நரகத்தை யடைய முயலுவது மடமை.

நாம் செய்த தவறுகளை மன்னித்துவிடும்படியும், இனிச் செய்வதில்லை என்று சபதம் செய்யவும், எந்தையை ஓரிடத் தில் வைத்துப் பேரின்பம் பெறத் தியானம் செய்யவும் ஓரி டம் அனைவருக்கும் அவசியம். அதுதான் கோவில்.

"திருக்கோயி லில்லாத திருவி லூருந் திருவெண்ணீ றணியாத திருவி லூரும், பருக்கோடிப் பத்திமையால் பாடா வூரும் பாங் கினொடு பலதளிக ளில்லா வூரும், விருப்போடு வெண்சங்க மூதா வூரும் விதானமும் வெண்கொடியு மில்லா வூரும், அருப் போடு மலர்பறித்திட் டுண்ணா வூரு மவையெல்லா மூரல்ல அடவி காடே." —திருநாவுக்கரசு சுவாமிகள்.

"மூர்த்திதலந் தீர்த்த முறையாற் றொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே."

—தாயுமானவர்

"ஆலயம் தொழுவது சாலவும் நன்று."

—கொன்றைவேந்தன்.

"கோயிலில்லா வூரில் குடியிருக்க வேண்டாம்."

—உலகநீதி

## நாஸ்திகம் ஒழிக!
## ஆஸ்திகம் ஓங்குக!!

உ

கடவுள் துணை

# பண்டிதமாளவியாவின் ஆஸ்திகப் பேருரை

[சென்னை "தேசபந்து" (4-5-1929) லிருந்து எடுக்கப்பட்டது]

—oo:o:oo—

1929 மேமீ 2உ சென்னைக் கடற்கரையில் ஸ்ரீமான் ஏ. ரங்கசாமி அய்யங்கார் அவைத்தலைமையில் பேசியது. இம் மாகாணத்தில், ஜாதி வருணங்களை ஒழித்துக் கடவுளையுமே ஒழிக்கவும் ஒரு இயக்கம் ஆரம்பிக்கப்பட்டிருப்பதாக நான் கேள்வியுறுகிறேன். (சிரிப்பு) கடவுளை யழிப்பதற்காக ஓர் இயக்கம் தோன்றியிருப்பதைக் கேட்க எனக்கு வருத்தம் ஏற்படுகிறது. கடவுளை யழிக்க இவர்கள் செய்யும் பிரயத்தனத்தால் கடவு ளில்லாமற் போய்விடமாட்டார். கடவுள் இல்லையென்று எவ்விதம் கூற முடியும்? நாம் பிறந்திருப்பதும், நம் சுற்றிலும் காணப்படும் அற்புத சிருஷ்டிகளும், உலக விந்தைகளும் பகவான் ஒருவ ரிருக்கிறார் என்பதை உணர்த்தவில்லையா? உலகம் நடக்கும் ஆச்சரியமான காரியமும், வெவ்வேறு விஷயங்களும் தாமாக ஒன்றுடன் ஒன்று பொருந்திச் செல்வதும் ஒரு சிருஷ்டி கர்த்தாவிருக்கிறார் என்பதை எடுத்துக் காட்டவில்லையா? சகல சக்தி வாய்ந்த பரமாத்மா ஒருவ ரிருக்கிறார் என்பது மெய். அவருடைய பெருமையை அறிய முடியாதவர்கள் பதர். உலக இயல்பைத் தெரிந்துகொள்ளச் சக்தியற்றவர்கள்தான் கடவுளில்லை யென்பார்கள். கடவுள்

என்று பெயர் சொல்ல விரும்பாத சாஸ்திரஞானிகளும் தத்துவாசிரியர்களும்கூடக் கடவுள்என்ெறாருஅந்தர்யாமியுளார் என்று ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். நாஸ்திகர்கள் என்று அழைக்கப்பட்ட ஸ்பென்ஸர், ஹேகேல் முதலிய சாஸ்திரா சிரியர்களும் தெய்வமென்ெறான்றுளது என்று ஒப்புக்கொள்ள நேர்ந்திருக்கிறது. கடவுள் என்பதற்குப் பதிலாக ஹெகல் என்பவர் கண்ணுக்கோ ஸ்பரிசத்திற்கோ தென்படும் வஸ்துக்கள் என்றும், தென்படாத ஆவியென்றும், மூலப்பொருளைப்பற்றி வியாக்யானம் செய்திருக்கிறார். இவர் கூறுவது அநேகமாக நமதுவேதாந்தத்தையனுசரித்திருக்கிறது. ஸ்தூலம் என்றும் ஆத்மன் என்றும் வேதாந்தத்தில் கூறப்படுவதை அவர் பொருள் ஆவி யென்றும் வியாக்யானம் செய்திருக்கிறார். உலக அநுபவத்தில் இயந்திரங்களை யசைத்து வேலைசெய்ய உதவிபுரியும் இஞ்சினியர்களிருக்கிறார்கள். அதையொப்ப, கடவுள்: உலகத்தை நடத்திவருகிறார். கடவுளுக்கும் இஞ்சினியருக்கும் வித்தியாச முண்டு. இஞ்சினியர் பிற பொருளை நடத்துகிறார். கடவுளோ தம் சிருஷ்டிமூலம் தாமே ஜீவனை மேலிட்டுச் செல்லுகிறார். இவ்வித மிருக்கையில் கடவுள் இல்லையென்று பிரசாரம் செய்வதற்கு இடமளிக்கக் கூடாது என்று உங்களை நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இம் மாகாணத்தில், கடவுளை யழிப்பதுடன் நில்லாது, கடவுளைஅடையச் சாதகமாக விருக்கும் கோவில்களை அழிக்கவும் சிலர் முற்பட்டிருப்பதாகக் கேள்வியுறுகிறேன். இது கொஞ்சமேனும் சரியில்லை. அந்தச் செய்கையை அவர்களே கைவிட்டுவிடவேண்டும். ஜாதிவருணங்களையும் அழிப்பதற்காகச் சிலர் முன்வந்திருப்பதாகவும் கூறப்படுகிறது. இம் முயற்சி வீணாகும் என்பதில் சந்தேக மில்லை. இந்தியாவில்

ஆதிகாலம் தொடங்கி இதுவரை செய்யப்பட்டுவரும் இத் தகைய முயற்சி பலன் தந்ததில்லை. இதனால் மற்றோர் குட்டி ஜாதி ஏற்பட்டுவிடுமே தவிர, ஜாதி வருணங்கள் அழியா. ஜாதி வருணங்களை ஒழிக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் கடைசியாகக் கொஞ்சக்காலமுன் வந்தவர்கள் பிரம்மோ சமாஜத் தலைவர்கள். இவர்களை யாதரித்தவர்கள் வெகு சிலரே. இப்பொழுது அவர்களுடைய நிலைமை யென்ன? ஒரு ஆயி ரம்பே ரடங்கிய கோஷ்டியொன்று பிரம்மோ சமாஜிகள் என்று தனியாகப் பிரிந்துநிற்கிறது. நம் சமூகத்தில் காணப் படும் ஊழல்களை நீக்கிச் சீர்ப்படுத்தவேண்டும் என்று ஆவல் கொண்டிருப்பவர்கள் தங்கள் பிரயாசை பலிக்குமாறு உழைக்க விரும்பினால், ஜாதி வருணங்களை அழித்துவிடுவது என்று வீணெண்ணம் கொள்ளாது உயர் வாழ்க்கை வாழ்வு உதவிபுரியவேண்டும் என்றே நான் கூறுவேன்.

கோயில்களை யழிப்பது என்பதும் அசட்டுத்தனமான காரியம். கோயிலில் சென்று அங்குப் பிரதிஷ்டை செய்யப் பட்டிருக்கும் விக்கிரஹத்தைத் தொழவே சாஸ்திர ஆதாரங்க ளிருக்கின்றன. கடவுள் இல்லாத இடமில்லை என்று வேதம் மொழிகிறது. கோயிலிலிருக்கும் விக்ரஹத்தில் கடவுளின் ஆவி பூரணவும் பிரதிஷ்டையா யிருக்கிறது. கடவுள் எந்த அணுவிலும் காணப்படுகிறார். ஆகையால், பக்தியுடனும் சுத்த மாகவும் எந்த மண்ணையும் தெய்வமாக வரித்துத் தொழலாம் என்று தெரிந்துகொள்ளவேண்டும். பார்த்திவ பூஜை செய்வ தைக் கவனித்தால் இதன் தாத்பர்யம் நன்கு விளங்கும். மனிதன் நல்ல புண்ய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்து மடியாக அந்த ஆற்றின் அடியில் மூழ்கி ஒருகை மணல் எடுத்து, அதை உருவாகப் பிடித்து, ஜலம் புரோட்சித்து, அக்ஷதை புஷ்பம், இன்னும் பல பூஜை சாமக்கிரியைகளை அதற்கு அர்ச்சனை

செய்கிறான். அப்பொழுது என்ன சொல்லுகிறான். மகிம்ஸ பரீம்தே! என்கிறான். அதாவது, ஓம் ஸ்வாமி பிரம்மாமுதல் சர்வ சாமான்யமனிதர் ஈறாக யாவராலும் அறிந்துகொள்ள முடியாத பரம்பொருளே! தங்களையும் தங்கள் பெருமை யையும் அற்பமனிதனாகிய நான் எவ்வாறு வருணிக்க முடியும்? என்னுள் அறிவிற்கடங்கிய தங்கள் பாதாரவிந்தங்களில் இந்த ரூபமூலம் தொழ அனுக்கிரஹிக்கவேண்டும் என்று கூறி அதை ஆராதிக்கிறான். இதிலிருந்து என்னஏற்படுகிறது? மணலின் ஒவ்வோர்சிறு கல்லிலும்கூடக் கடவுள் இருக்கிறார். அவர் எங்கும் வியாபித்துள்ளவர்; சர்வ சக்தி வாய்ந்தவர்; சர்வாந்தர்யாமி. அத்தகைய மூர்த்தியை நாம் நம் முன் னுள்ள சிறு உருவத்தில் கிரஹித்துக்கொள்ளுகிறோம். அவ் விதம் கிரஹிக்கப்பட்டுள்ள உருவங்கள் பூஜிக்கப்படும் புனித மான கோயில்களுக்குச் சென்று தெய்வம் தொழுது மனோ திடமும் சாந்தமும் பெறுவது எவ்வழியில் கெடுதலாகும்? கோயிலுக்குச் செல்பவர்கள் பக்தி பரவசராகிறார்கள். கோயி லில் தூய்மையாகப் பூஜிக்கப்படும் விக்ரக முன்னிலையில் சரீர சுத்தத்துடனும், மனோவாக்குச் சுத்தத்துடனும் நின்று தெய் வத்தைத் தியானிப்பவர்கள் மனம் நிம்மதியுற்றுப் பரவசமா யிருக்கும் சமயத்தில் உயர் நோக்கங்களும் ஞானமும் நமக்கு உதயமாகின்றன. இத்தகைய உணர்ச்சிக்கு இடமளிக்கச் சாதனமாக விருக்கும் கோயில்களையும் விக்ரக ஆராதனைகளை யும் ஒழிப்பதற்கு இந்நாட்டுச் சிறுவர்கள் உடந்தையாக இருப்பது கூடாது. வெகு காலம் தொடங்கிப் பாரம்பரையாக அநுஷ்டானத்திலிருந்துவரும் தெய்வ ஆராதனையை ஒருவினா டிப்பொழுதில் நிறுத்திவிடுவதாக முயலுவது தருமமேயில்லை. அதற்குச் சம்மதியாதீர்கள். தெய்வத்தைத் தொழுவதற் குப் பலவித மார்க்கங்கள் வேதங்களால் ஓதப்பட்டுள்ளன;

விக்ரகமூலம் தொழுவது அவற்றில் ஒன்ருகும். விக்ரஹ ஆராதனை யென்பது சர்வ சாமான்ய மனிதருக்கு மாத்திரம் ஏற்பட்ட தென்பது சரியில்லை. ஞானங் கரைகண்ட பெரியார்களும் விக்ரஹ ஆராதனை செய்திருக்கிருர்கள். ஆதி சங்கராசாரியார் சம்போ சங்கர பூஜைசெய்த விக்ரஹம் இன்றைக்கும் காப்பாற்றப்பட்டுப் பூஜிக்கப்பட்டு வருகிறது. சங்கார் தோன்றிய இம் மாகாணத்தில் விக்ரஹத்தைத் தகர்ப்பதாகக் கூறுவது வேடிக்கையாக இருக்கிறது. தெய்வவிக்ரஹங்களை இடிப்பது கெட்ட காரியம். அச் செய்கைக்கு மூற்போந்துள்ள கொடிய இபக்கத்தை முளையிலேயே தடுத்துவிடவேண்டும் என்றே நான் இவ்வளவு தூரம் பேசலானேன்.

---



ஸ்ரீ ஆதிமூலம் பிரஸ் சென்னை:—1929.



உ

கடவுள் துணை

# கோயிலை இடிப்பதா? கொண்டு திருத்துவதா?

## ஆரியர் காலத்தில் கோயில்கள் மயக்கம்

## கோயில் என்பது தமிழர் கோயிலே

## கோயிலின் உண்மை நோக்கங்கள்



[தேன்பட்டினம்
உயர்திருவாளர் பொ. மீனாக்ஷிசுந்தரம் பிள்ளை
எம்.ஏ., பீ.எல்., அவர்கள் எழுதுவது.]

---

[இஃது சென்னை "தேசபந்து" வாரப் பத்திரிகை
(16-3-1929)ல் இருந்து எடுத்தது]

கோயிலை இகழ்பவரும் உள்ளார்கள், புகழ்பவரும் உள்ளார்கள். மக்கள் பலராயபோது அவர்கள் கொள்கையும் பலவாகித்தான் முடியும்; அதுபற்றி நாம் கவலைப்பட வேண்டுவதில்லை. சண்டை பிறந்தால்தான் உண்மை பிறக்

கும். ஆனால், இவ்வாறு இகழ்வதும் புகழ்வதும் எதனால் என்று ஆராயும்போதுதான் நம்மை வியப்பு ஒரு புறமும் வருத்தம் ஒருபுறமும் வாட்டுகின்றன. ஆரிய சமாஜத்தினரோ: கோயில் கட்டியது ஆரியர்கள் அல்ல; ஆதலின், அவை போற்றத்தகுந்தன அல்ல என்று முடிவு கட்டுகின்றனர். நான்மறையில் நமது கோயில்களைப்பற்றி நாலொரு சொல்லும் இல்லை என நன்கு எடுத்துக் காட்டுகின்றனர். சுயமரியாதை இயக்கத்தைச் சேர்ந்த சிலர் கோயில்கள் எல்லாம் நம்மை ஏய்த்துப் பிடித்து அடிமைகளாக்கப் பார்ப்பனர் வீசிய பொய்வலை என்பர். ஆரியர் கட்டிய கோயில் தமிழர்க்கு ஆகாதென்பர். கோயில் நல்லதோ கெட்டதோ என்று ஆராயாது அதன் பிறப்பினைப்பற்றிக் கனவு கண்டு முடிவிற்குவருதல் மூதறிஞர் செயல் அல்ல. பிறப்பின் கொடுமையை ஒழிக்கப்புகுந்து இவ்வாறு பிறப்பின் கொடுமைக்கு அடிமைகள் ஆவது ஓர் வியப்பே யாகும். ஆரியர் திராவிடர் என்ற கூக்குரல் எங்கும் கேட்கின்றது. இதன் பொருளறிய இதுபோது பொழுதில்லை. திராவிடரோ ஆரியரோ கொடியராயின் அவர் வழக்க மனைத்தும் கொடியவையோ? சேற்றிலே செந்தாமரை பிறக்கவில்லையா? கெட்டவரிடத்து நல்ல கொள்கைகள் இல்லையோ? நம்மவர் கொள்கை யனைத்தும் நல்லனவோ? பொன்னான கையிலே புண் வருமானால் போர்த்துப் புனைந்து வைப்போமா? பொற்கத்தி என்று கழுத்தை யரிந்துகொள்வோமா? உடன்பிறந்தே கொல்லும் நோய். கண்ணுக்கெட்டாக் கருமலையிலுள்ள மருந்தே அதை ஒழித்துதவும். ஒரு காட்டு மிருண்டி கடல் கறுப்பென்றால் இல்லை என்போமோ? மறையவனே வந்து பால் கறுப்பென்றால் ஆம் என்போமோ? நமதறிவை அவ்வாறு ஒற்றிவைத்துவிட்டு வாழ முடியாது. ஆரியர் கொள்கையாயின் என்ன? திராவிடர் கொள்கையாயின்

என்ன? நல்லதை நாடுதல் நமது கடமை.

கோயில் என்பது தமிழர் கோயிலே என்று சொல்ல இட முண்டு. நான்மறைகளில் கோயில்களைப்பற்றிப் பேச்சே இல்லை என்கின்றனர் பல பெரியோர். உண்டென்போர் சிலரே. அவர்களும் இரண்டொரு குறிப்பே உள்ளன என்பர். இயற்கையின்கூத்தே ஆரியர் வழிபடநின்றது. வேள்வியே அவர்கள் செய்த வழிபாடு. அவ் வேள்வி மேடையும் ஒரு வகையில் வீட்டு மேடையே. தனித்தனி வழிபடுவதே அவர்களுள் பெருவழக்காயது. புத்தர் கொள்கைகளும் சமணர் கொள்கைகளும் பரவியபோது, அவர்களில் துறவிகளாய் வாழ்ந்த அறவணவடிகள் தவப்பள்ளிகளில் தங்கிவந்தனர். பல நிலைமாடங்கள் (கோபுரம்) பல எழுந்தன. அவற்றில் ஒவ்வொரு நிலையிலும் ஒவ்வொருவராக அறவணவடிகள் வாழ்ந்துவந்தனர் என்று கல்லேட்டிலும் செப்பேட்டிலும் படிக்கின்றோம். “புத்தம் சரணம் கச்சாமி, தர்மம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி” என்றே புத்தர்கள் காப்புக் கட்டிக்கொள்கிறார்கள். புத்தருக்கும் அறத்திற்கும் உள்ள ஏற்றம் அறவணவடிகளது கழகத்திற்கும் உண்டு. அந்தக் கழகம் இருக்க அறப்பள்ளிகள் வேண்டாமா? அவர்கள் வாழப் பல நிலைமாடங்கள் வேண்டாமா? சொற்பொழிவுகள் நிகழ்த்த அம்பலங்கள் வேண்டாமா? புத்தரைப் போற்றப் பொற்கோயில்கள் வேண்டாமா? இவை எல்லாம் அடங்கியவையே புத்தர் கோயில்கள். அருகர்கள் கோயிலும் அத்தகையனவே. புத்தர்கள் பார்ப்பனரா? சமணர்கள் பார்ப்பனரா?

இந்துமதம் புத்துயிர்பெற் றெழுந்தபோது புத்தர் சமணர் என்றவர்களிடத்தே காணக்கிடந்த நல்ல கொள்கைகளை நம்மவர் கைக்கொண்டு அவற்றைத் தமது மதத்திற்கு அடிப்படை யாக்கினர். கோயில்களும் எழுந்தன. புத்தர்

இருந்தவிடத்தே பெருமாள் புகுந்தார். அருகர் இருந்த இடத்தே சிவபெருமான் நுழைந்தார். அத்துணையே வேற்றுமை. அதற்கு முன்னரே, நம்மவர் கல்லிலும் செம்பிலும் கடவுளை அடைத்து வழிபட்டிருக்கலாம். ஆனால், "மண்டபமெனும் அம்பலங்களும் கோபுரமெனும் பலநிலை மாடங்களும் புத்தருக்குப் பின் எழுந்தவை என்று உறுதியாகக் கூறலாம். பலர்கூடி வழிபடவேண்டி எழுந்தவை இவை. தனிநின்று வழிபட்ட காலம் போயிற்று. ஒன்றுகூடி வழிபடும்காலம் வந்தது. ஒருங்குகூடி வழிபடுவதென்பது அன்புநெறியின் உயிர்க்கொள்கையாகும். இவ் வன்புநெறி தமிழர் நெறியாதலின் கோயிலும் தமிழர் படைத்ததேயாகும்.

தன்னந் தனியே நின்று வழிபடும்போது மனமுருகிக் குவிதல் எல்லோருக்கும் எளிதில் கைகூடுவதில்லை. பலரும் ஒருங்குகூடிப் பாடி ஆடிப் பாவும்போது கண்டோரும்கூடக் கண்ணீரும் கம்பலையுமாகக் கதறி அழுது கடவுளை வணங்கிக் கடவுளுரு வாகின்றனர். ஏன்? மக்கள் : தனித்து வாழும் புலிகள் அல்லர். கூட்டமாய் வாழும் இயல்பினர். மக்களைத் தனியே அடைத்துவைப்பது, அதுபற்றித்தான் கடுங்காவல் என்று பேசப்படுகின்றது. ஒருவன் தனிவழி நின்ற ஆட்டைக் கண்டு அஞ்சி விதிர்க்கலாம். ஆனால், அவனே ஓர் கூட்டத்தில் இருப்பானானால் அஞ்சா நெஞ்சுபடைத்த தறுகணாளனாக மாறிவிடுகின்றான். நாம் ஒவ்வொருவரும் பெரிய திருவிழாக்களிலும் கூட்டங்களிலும் நம்மையும் அறியாது நம் இயற்கை மாறி நிற்பதை உணர்ந்துள்ளோம். கூட்டமானது என்ன கொள்கையோடு கூத்தாடுகின்றதோ அந்தக் கொள்கை நமதுமாகின்றது.

[திருக்குறள் - அரசியல் - சகஎ-ம் அதி-சிற்றினஞ் சேராமை - உ]

"நிலத்தியல்பால் நீர்திரிந் தற்றாகும் மாந்தர்க்
கினத்தியல்ப தாகும் அறிவு."

என்று கூறிய வள்ளுவர் கூட்டத்தில் மக்கள் மனமாறி நிற்கும் இயல்பினையும் குறிக்கின்றார். "ஹரே கிருஷ்ண ஹரே கிருஷ்ண" என்று பலர் கைதட்டி ஆடித் தம்மை மறந்து கடவுள்வழி நிற்பதை நாம் இப்பொழுதும் காண்கின்றோம். இவ் வழியை நிலைநாட்டிய சைதந்யர் இவ்வுள வறிந்தவர். பலரும் ஒருங்குகூடி வழிபடுவதனால் கன்மனத்தவரும் கனிந்த மனத்தவர் ஆவர். இவ் வழியே எல்லோரும் இந்து மதத்தினராகி இன்புறவேண்டிக் கோயில்களைக் கட்டியவர்களும் கட்டுவித்தவர்களும் அறிவிலிகள் அல்லர். கோயில்கள் பார்ப்பனர் வீசிய மயக்கவலையல்ல. அருந்தமிழ்ப் பெரியோர் வீசிய அன்புவலையாகும். வடநாட்டிலே கோவில்கள் பல உள்ளன. திருவிழாப் பல நடக்கின்றன. ஆனால், ஒவ்வொரு நாளும் பலரும் ஒருங்குகூடி வழிபடவேண்டிய அம்பலங்களும் பலநிலை மாடங்களும் தமிழ் நாட்டில் இருப்பது போல வடநாட்டில் காணக் கிடையா. இதனாலும் கோவில்கள் எல்லாம் தமிழரின் அறிவிற் பிறந்த செல்வப்பிள்ளைகள் என்பது தெளிவாகின்றது.

ஆகவே, கூட்ட வழிபாடே கோவிலுருக் கொண்டது என்பதாயிற்று. இனி அம்பலங்களும் பலநிலை மாடங்களும் எதன்பொருட்டு இருக்கின்றன? பயனிலாதன என்று புறக்கணித்தல் நமது அறியாமையின் ஆழத்தையே அளந்து காட்டும். பித்தரும் பயனிலாத செய்யாதபோது கோவில் வகுத்த பெரியோர் ஏதோ ஒன்றை எண்ணித்தான் பலநிலை மாடங்களைக் கட்டியிருத்தல்வேண்டும். சேய்மையில் இருப்பாருக்கும் தம்மை அம் மாடங்கள் நினைப்பூட்டுகின்றன என்பது ஒன்று. அதன்மேல் ஏறிப் பார்த்தால் பகைவர் வருதல் போதல் தெரியும் என்பது மற்றொன்று. புத்தர்களது பலநிலைமாடங்களில் (கோபுரம்) பலர் வாழ்ந்துவந்தது போலத் தமிழரது கோவில்களிலும் பல பெரியோர்கள் வாழ்ந்துவந்

திருக்கலாம் என்று எண்ண இட முண்டு. இந்தப் பலநிலை மாடங்களின்மேல் ஏறிப் பார்த்தவர்கள் ஒவ்வொருவருக்கும் அவை இன்ப ஊற்றென்பது எளிதில் விளங்கும். அருகே மயிலாட, குயில் பாட, சுற்றியும் கிளிகளும் அழகிய பறவைகளும் வீற்றிருக்க, இயற்கையன்னை எதிரில் இன்பக் கூத்தாட இறைவன் வாடை எங்கும் வீச, உலக கூச்சல் காதில் வீழாது அவிந்துபோக, நன்றாகக் காற்று நாற்புறத்திலும் வீச, நடுவே நின்று அறிவு விளக்கால் அனைத்தையும் கண்டு இன்பக்கடலில் இனிதே திளைப்பதற்கு இவ்விடம் எல்லா வகையாலும் ஏற்றதாகும். அருணகிரிநாதர் கிளிப்பிள்ளை வடிவாகத் திருவண்ணாமலையில் உள்ள பலநிலை மாடமொன்றில் இருந்து வந்தாராம். கிளிப்பிள்ளைக் கதையானது சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளைக் கதையாக முடிந்தாலும், அவர் பலநிலைமாடத் திருந்தது உண்மையாகலாம். இராமாநுஜர் பலநிலை மாடத்தின் மேலிருந்து திருமாலின் திருமந்திரத்தை வாரி இறைத்தாராம்.

நாலுகால் மண்டபமும், பதினாறுகால் மண்டபமும், நூறுகால் மண்டபமும், ஆயிரங்கால் மண்டபமும் ஏன் எழுந்தன ? அவை பட்டிமண்டபமாகவும், அம்பலமாகவும், அரங்கமாகவும், கழகமாகவும், ம்ன்றமாகவும் விளங்கின. திருவொற்றியூரில் உள்ள ஓர் மண்டபத்திற்கு வியாகரண மண்டபம் என்று பெயராம். இந்த எழுத்தறியும் அம்பலத்தில் பெருமானுக்கு எழுத்தறியும் பெருமாள் என்று பெயர். அவ் வம்பலத்தில் இலக்கண நூல் ஆராய்வது வழக்கம் என்று கல்லேட்டில் படிக்கின்றோம். நூல்களைக் கோயில்களில் அரங்கேற்றுவதை இந்நாளும் காண்கின்றோம். அவ் வம்பலங்களில் சொற்பொழிவு நிகழ்த்துவது இன்னும் பழங்கதையாகிவிடவில்லை. நான்மறையையும் திருமுறையையும் ஓதுவதை இன்றும் கேட்கலாம். தமிழாராய்ந்த கழகத்தினர்

இருந்த சங்கம் எங்கிருந்தது? நான்மாடக்கூடலில் பொற்றாமரைக் குளத்திலே தலையறிவுடையாருக்கு அகன்றிடம் கொடுக்கும் அறிவினையுடைய மணிமீதிருந்தது என்பது பாட்டிக்கதையாய் முடிந்தாலும், தமிழாராய்ந்த இடம் நான்மாடக்கூடல் என்பது பொய்யாக வேண்டுவதில்லை. எழுத்தறியும் அம்பலத்திருந்த பெருமான் எழுத்தறியும் பெருமாள் ஆனதுபோல இந்தக் கழகத்திருந்த சொக்கரும், முதற் கழகத்து மூதறிஞர் எனப் பெயர் பெற்றார்.

"ஏழிசைச் சூழல் இருந்தவனும் இறைவனே"

என்பர் மணிவாசகர்.

இதனைப் புலவாது புனைந்துரை என்று புறக்கணிப் போரும் இசையினை ஆராய்ந்தவர்கள் கோயிலகத்திருந்து கூடி ஆராய்ந்ததால்தான் இவ்வாறு புலவரும் கட்டிவிட்டனர் என முடிவு செய்தல்வேண்டும். சில கோவில்களில் எல்லா இன்னிசைக் கருவிகளையும் முறையே முழக்கி ஓர் திருவிழா நடத்துவது இன்றும் வழக்கமாக இருக்கின்றது. இசையிலாத திருவிழா என்றும் இல்லையே. திருக் கூத்தெல்லாம் தெருக் கூத்தாய் முடிந்த இந்த நாளிலும் அக் கூத்தினையும் கோயிலமர்ந்த கூத்தரசின் முன்தான் காண்கின்றோம். ஓவியத்தைப்பற்றி என் சொல்வது? கண்கவர் வனப்பொடு திகழ்கின்ற இவை ஒரு சிலவே இப்போது காணக் கிடைப்பன. கல்லிலும் செம்பிலும் வடிவங்களைச் செதுக்கும் கைத்திறனைக் கோவிலில் அன்றி வேறெங்கே காணலாம்! கூத்தரசின் ஆடலமைதியினையும் அவ் வுருவத்தின் உள்ளக்கருத்தினையும் மேனாட்டாரும் புகழ்ந்து பாராட்டுகிறார்கள் என்றால் மேல் நாம் என்ன பேசுவது? கல்லிலும் செம்பிலும் ஓவியத்திலும் ஒவ்வோர் அணுவிலும் உயிரொடு அறிவும் அன்பொடு இன்பமும் செறிந்து திகழக் கடவுள் உருவங்களைக் கண்டெடுத்த பெரியோர்கள் இறந்து மறைந்தனர். ஆனால்,

அவர்களது அழியாப் பேரறிவோ இறைவனுருவாகிக் கோயில்கள் என நிலைநின்று பேரும் பெற்று இன்றும் விளங்குகின்றது. மேல் இசை, கூத்து, ஓவியம், கல்வெட்டு, செப்புருக்கு முதலிய பல துறைகளையும் வளர்த்தவை கோவில்களே யாகும்.

கோயிலே கல்லூரி. உலகெலாம் கதிரவன் ஒளி விளங்கினாலும் தமது வீட்டின் வாயிலில் காணும் ஒளியே ஒளி என்றும், மற்ற இடத்தெல்லாம் இருளே உண்டென்றும் மன்றாடுவது மக்க ளியல்பு. தமது நூலில் கண்டதுதான் உண்மை, பிறநூலில் கண்டன எல்லாம் பொய் என்று கண் மூடிக் கழறுவர். எதிர் ஏதேனும் பேசினால் எமனுல கனுப்புவர். தமது கொள்கைகள் பயின்று வரும் நூல்களை யல்லாது பிற நூல்களை ஓதுவார் பிற நாடுகளில் பலர் இருந்ததில்லை. ஆனால், கோயில்களாகிய கல்லூரிகளோ எந்த நூலையும் இகழ்வதில்லை. குண்டு சட்டியில் குதிரை ஓட்டாது. இயற்கை யனைத்தும் இறைவன் வடிவென இறைஞ்சின. எங்கும் அறிவு ததும்பி வழிகின்றதென உறுதியாக இன்றும் எண்ணுகின்றன.

[திருக்குறள்-அரசியல்-சுஉ-ம் அதி-அறிவுடைமை-௩]

“ எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப் பொருள் காண்ப தறிவு.”

என்கின்றான் தமிழன். இக் கல்லூரியில் எல்லா நூல்களையும் கற்பதற்கு இட முண்டு. கடவுள் எதிரிலேயே கடவுள் இல்லை என்ற நூலையும் கற்பிக்கக் கட்டளை ஏற்படுத்தி யிருந்தனர். பூர்வ மீமாம்சை கடவுள் இல்லை என்ற கொள்கையைப் பரப்புவதொரு நூல். அதனைப் படிப்பதற்கும் படிப்பிப்பதற்கும் ஏற்பாடு செய்திருந்தனர். சில கோயிலைச் சேர்ந்தோர் எனக் கல்வெட்டில் படிக்கின்றோம். ஈதல்லவா அப் பெரியோர்களுக்குக் கடவுள் இருப்பில் இருந்த நம்பிக்

கையின் உறுதிப்பாட்டை உணர்த்துகின்றது. விருத்தா நாரீம்பதிவ்ரதா என்பதல்ல இவர் கதை. கடவுள் இல்லை எனும் நூல்களைக் கற்றறிந்தே கடவுள் உண்டு என முடிவு கட்டினர். எக் கல்வி கற்றாலும் இறைவனே அதன் முடி வென அவர்கள் அறிந்தனர்.

[திருக்குறள்-பாயிரம்-க-ம் அதி-கடவுள் வாழ்த்து-உ]

"கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅ ரெனின்."

என்கின்றான் தமிழன்.

அம்மட்டோ! ஊரார் வழக்கினை முடிவு சொல்லும் மன்றங்களாகவும் இக் கோயில்கள் விளங்கின. "நெஞ்சத்து நல்லம் யாம்" எனும் நடுவுநிலைமையோடு ஒழுக்கத்தழகால் உயர்ந்த சான்றோர் ஒவ்வொரு ஊரிலும் ஒருங்குகூடி வழக் கினைச் சிக்கறுப்பது பழையநாள் வழக்கம். இவ் வழக்கம் சில மூலைமுடுக்குகளில் இந்நாளிலும் குற்றுயிரோடு கிடக் கின்றது. பழையனூர் நீலிகதையும் திருநீலகண்ட நாயனார் கதையும் பொய்யாக முடியலாம். ஆனால், அக் கதையைக் கட்டிவிட்டவர்கள், தங்கள் காலத்தில் தில்லை வாழந்தண ரும், பழையனூர் வேளாளரும் திருக்கோயிலிலிருந்து அறம் வழங்கிவந்த வழக்கத்தையே தமது கதையில் சுட்டினார்கள். அவ்வழக்கத்தையும் கணுக்கண்டே எழுதுகின்றார்கள் என்று சொல்ல இட மில்லை.

"வேதாளம் சேருமே வெள்ளருக்கம் பூக்குமே
பாதாள மூலி படருமே—மூதேவி
சென்றிருந்து வாழ்வளே சேடன் குடிபுகுமே
மன்றோரம் சொன்னார் மனை."

என்கிறாள் தமிழ்க்கிழவி. மன்றம் நிலைநின்ற இடம் கோவில் ஆதலின் அங்கு ஓரம் பேசுவது இவ்வளவு கேடாக முடி கின்றது.

இனி, அரசியற் கழகமும் கோயிலே யாகும். அவ்வவ் வூரை அவ்வவ்வூரினரே ஆண்டுகொள்ளும் உரிமை அந் நாளில் உண்டு. ஊரினர் அனைவரும் ஒருங்கு கூடி ஐந்தாறு முதலாளிகளைச் சில ஆண்டிற் கொருமுறை தேர்ந்தெடுப்பது பழைய வழக்கம். பெண்களும் அவர்களில் ஒருவராக வீற் றிருக்கலாம். தேர்ந்தெடுக்கும் முறை திருவுளச் சீட்டே. இந்தச் செயல் புரிந்த சிலரைத்தவிர எல்லோரும் ஒருவர்பின் ஒருவராக முதலாளிக ளாகலாம். ஊர்மக்கள் அனைவரும் உயர்வு தாழ்வின்றி ஒரே தன்மையர் என்ற கொள்கையை அப் பெரியோர்கள் அறிந்திருந்ததால்தான் திருவுளச் சீட் டைத் தேர்தல் முறையாகக் கைப்பற்றினர். ஊரினர் பெயர் ஒவ்வொன்றையும் தனித்தனியே சிறு ஓலை நறுக்குகளில் எழுதிக் குடத்தில் இட்டுக் குலுக்கியபின் யாரேனும் ஒரு சிறுவனை அவற்றில் ஒரு நறுக்கினை எடுக்கச் சொல்லிய போது அவன் அனைவர் எதிரிலும் எடுத்த நறுக்கில் எந்தப் பெயர்வழியின் பெயர் இருந்ததோ அவரே முதலாளியாயி னர். இவை யெல்லாம் நடந்தது கோயிலில்தான். இது கட் டுக்கதை யல்ல. உத்தரநல்லூர் கல்வெட்டில் கண்ட உண் மைக்கதை யாகும். இத்தகைய அரசியற் கழகங்கள் கூடு வதற்காகவே இவ் வம்பலங்கள் பெரியனவாக அமைக்கப் பெற்றன போலும். பொதுவாக ஊர்மக்கள் கூடும் இடமும் கோயிலே யாகும். திருமண ஊர்வலம் வருவதும் கோயி லைச் சுற்றியுள்ள தெருக்களில்தான். புதிதாக மணப்பெண் வந்தால் கோயில் குளத்தருகே தங்குவது இன்றும் பல இடங்களில் வழக்கமாக இருந்துவருகின்றது. பற்பல குடி யினரும் தம்முடைய பொதுக் கூட்டங்களைக் கோயிலில் தான் கூட்டுகின்றனர்.

இக் கோயில்கள் அறப்பள்ளிகளாகவும் விளங்கின. ஏழைகளுக்கும் வெளியூரிலிருந்து வருவார்க்கும் வயிறார

உணவளிப்பதை இந் நாளிலும் இக் கோயில்களில் காண்கின்றோம்.

"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே."

என்கிறார் தமிழ்ச்சாத்தனார். படமாடுங் கோயிலைவிட நடமாடுங் கோயிலாகிய மக்களைச் சிறப்பித்து அவரது அழியா ஆற்றலைப் புகழ்வர் தமிழத் திரு மூவர். இக் கோயில்கள் அறிவை வளர்த்தியதனை முன்னரே குறித்தோம்.

மருத்துவப் பள்ளிகளாகவும் இக் கோயில்கள் திகழ்ந்தன என்று சில கல்லேடுகள் நமக்குக் கோள் சொல்கின்றன. இத்துணைப் பெயருக்கு மருந்து கொடுப்பதெனக் கட்டளை ஏற்படுத்தி யிருந்தனராம். இப்போதைய மருத்துவப் பள்ளிகளில் (ஆஸ்பத்திரி) நோயாளியைத் தேற்றிவைக்கும் பெண்கள் இருப்பதுபோலக் கோயிலைச் சார்ந்த மருத்துவப் பள்ளிகளிலும் பொதுமகளிர் பணிப் பெண்களாக இருந்தனர் போலும்.

இனிக் கோயில்கள் கட்டும் இடந்தான் எது? இயற்கையன்னை இன்பக் கூத்தாடும் இடமே யாகும். ஆற்றோரத்திலும், மலைமீதும், கடற்கரையிலும் இயற்கையினிடையே கடவுளைக் கண்டு தொழுதனர். மக்கள் குடியேறி வாழ்வதற்குப் பலவகையாலும் பொருத்தமான இடங்களே கோயில்களாகி வளர்ந்தன. புத்தர் சமணர் முதலியோரது கோயில்கள் துறவிகளுக்கென எழுந்தவை. ஆனால், நமது கோயில்களோ இல்லறத்தாருக்கும் துறவறத்தாருக்கும் இன்றியமையாதனவாய் இருந்தபடியால் ஊருக்குள்ளேயே விளங்கின. இவை தொடக்கத்தில் தூய்மையான இடங்களாக இருந்திருத்தல் வேண்டுமென நாம் சொல்லவும் வேண்டுமோ? நல்ல நீருக்கும் நல்ல காற்றுக்கும் கருப்பில்லாத இடத்தில்தான் கோயில்கள் மலிந்தன. எனவே, மக்களின் வாழ்விற்கு வேண்டியவை யாவும் அங்கிருந்தன. நல்ல காற்று, நல்ல நீர், நல்ல

உணவு, இருத்தற் கேற்ற இடம், மருத்துவப் பள்ளி, அறப் பள்ளி, கல்லூரி, இன்னிசை, திருக்கூத்து, தமிழ்ப்பாட்டு, உயிரோவியம், கடவுள் வடிவம், இயற்கை யழகு, கடவுள் இருப்பு, தவப்பள்ளி, மன்றம், ஊராளும் அரசியற்கழகம், பொது வாழ்க்கைக்குத் தோற்றுவாய் இவை யனைத்துமாய்ச் சிறந்து விளங்கியது கோயிலே யாகும். இக் கோயில் இல்லை யானால் இவை ஒன்றும் இல்லை எனல்வேண்டும். கோயிலில் லாத ஊர் சுடுகாடே யாகும்.

"திருக்கோயில் இல்லாத திருவிலூர்."

என்று இதுபற்றியன்றோ திருநாவுக்கரையர் பாடுகின்றார்? நமது இளஞ் சிறுவனும் படிக்கத் தொடங்கும்போதே

"கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்.''

என்று பாடுகின்றான்.

இந்தக் கோயில்கள் நல்லனவா? கெட்டனவா?

ஆனால், இவ்வாறு கோயில்கள் இப்போது இல்லை என்பது உண்மையே. பல நிலைமாடம் பாழாய்க் கிடக்கின்றன. பல மன்றங்களும் பள்ளியறை யாயின. எழுத்தறியும் அம்பலத்தே எழுத்துக் கூட்டுவாரும் இல்லை. பொற்றாமரைக் குளமோ பாசி பிடித்திருக்கின்றது. தவப்பள்ளி எல்லாம் சோம்பேரிப் பள்ளியே. மருத்துவப்பள்ளியில் மருந்தை மறந்தனர். பணிப்பெண்கள் பரத்தையர் ஆயினர். அறப் பள்ளி எல்லாம் மறப்பள்ளியே. அரசியற் கழகம் அடியோடு மறைந்தது. ஒருவருக்கொருவர் உயர்வு தாழ்வு ஏற்படுத்தி ஏணி ஏற்றம் பாடுகின்றனர். கடவுள் வழிபாடோ கடவுளுக்குப் பள்ளியறையில் திரட்டுப்பால் ஊட்டும்வரை. பாட்டெல்லாம் தவளையின் பாட்டே. இசை யில்லை. அறம் இல்லை தவம் இல்லை. ஓவியம் இல்லை. கல்வெட்டு இல்லை. அம்மட்டோ! அங்குக் கடவுளும் இல்லை என்கிறார் காந்தியடிகள். என் செய் வது? இடித்து விடலாமா? அது கையால் ஆகாதவன்

பேச்சு. துன்பம் வரின் தூக்கிட்டுச் சாகின்றவன் ஆண் மகன் அல்ல. கோயில்களை முன்னிருந்த நிலைக்குக் கொண்டு வருதல் வேண்டும். அன்றியும், கோயிலை இடிக்கத்தான் இய லுமா? இடித்தற்கும் பண மெங்குளது? இடித்தாலும் நம் தலைமேல்தான் இடிந்து விழும். மதப்பித்தும் பணப்பித் தும் மக்களில் பலர்க்கு முண்டு. அவற்றை நம் முன்னோர்கள் செய்ததுபோல நல்வழியில் பாய்ச்சினால்தான் பயன் பெற லாம். கோயில் கட்ட ஆளிருக்கின்றனர். மற்றைய வழி யில் செலவு செய்ய ஆள் இல்லை. ஆகவே, எல்லாவற்றையும் கோயிலுடன் சேர்த்துவிட்டால் கோயிலுக்கு வருவது அவற்றிற்கும் வரும். ஆகவே, கோயில் கட்டுவோருக்குப் பழைய கோயிலின் இயல்பினை எடுத்துரைத்து அத்தகைய கோயில்களைக் கட்டுவித்தல்வேண்டும். பழைய கோயில்க ளைச் சீர்திருத்த வேண்டும். இது இயலாததொன்றன்று. கையை முறிக்க வேண்டாம். பொதுமகளிரைப்பற்றி ஒரு சட்டம் வந்துளது. கோயில் வருவாயிலிருந்து பொது நன் மைக்குச் செலவிடல் வேண்டுமென மற்றோர் சட்டம் ஏற் பட்டிருக்கின்றது. எல்லோரும் கோவிலுக்குள் போதலை இன்னும் சில ஆண்டுகளில் நாம் காணலாம். திருவொற்றி யூரில் மகிழடித் திருவிழா அன்று பலரும் கோயிலில் இருந்த னர். இதுவும் வழக்கமாக முற்றினால் இயல்பாகி விடு மன்றோ? ஒரு குடியினருக்கும் மற்றொரு குடியினருக்கும் வேற்றுமை யறிய இயலாதபடி. எல்லோரும் உயர்நிலை யடைந் தால் வேற்றுமை யறிவார் யார்! வேண்டாம் வெளியே போ என்பார் யார்? அந் நிலையைச் சென்னையில் பலர் அடைந் துள்ளனர். சில நாளில் நாட்டில் உள்ள நம் மக்கள் அனைவ ரும் அந் நிலையை அடைவர் என்பதில் ஐயமொன்றும் இல்லை.

இந்தக் கோயில்களே வட நாட்டிலுள்ளாரையும் தென்

ருட்டிலுள்ளாரையும் ஒன்று பிணிக்கும் கயிறுகளாம். கோயில் குளங்களுக்குப் போய்வருதல் வழக்கமாதலின் பல நாட்டினரையும் கண்டு அவரும் நம்மவர் எனத் தெளிந்து உயர் வடைகின்றோம். ஒற்றுமை யுணர்ச்சி இவ்வகையால் ஓங்கி வளர்கின்றது. இன்னும், மக்கள் எல்லாம் கடவுளின் செல்வப்புதல்வர் ஆதலின் அவர்களுக்குள் வேற்றுமை இல்லை என்பதைக் கோயில்கள் உயர்நிலை யடைந்தநாளில் வற் புறுத்தின. இப்பொழுது இல்லையே என ஏங்குகின்றோம். ஆனால், கையில் கட்டி வந்ததென்று அதனை வெட்டி எறி வோமா? பாணனை ஆழ்வாராக்கி, ஒவ்வொரு கோயிலிலும் அவனது வடிவினை ஒவ்வொரு கல்லில் அடித்துக் கடவு ளொடு ஒன்றாகவைத்து, அறிவிற் பெரிய அந்தணரையும் அவ னடியினை வணங்கச் செய்வதென்றால் அதனைப்பற்றி என் என்பது? திருநாவுக்கரையர் நம்மாழ்வார் போன்ற பார்ப் பனர் அல்லாதார் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு கல்வடி வம் ஒவ்வொரு கோயிலிலும் உண்டு. அவர்கள் வாய்மொழி திருவாய்மொழி யாயிற்று, திருமறையாயிற்று. அந்தணரும் அவரை வழிபட்டாதல் வேண்டும். அரசினை வழிபட்ட அப்பூதியும். நம்மாழ்வாரை வழிபட்ட மதுரகவியும், அவ் வழிபாட்டினாலேயே அடியவரிற் பெரியர் ஆயினர். உலகினை எல்லாம் ஒருங்கு கட்டி யாண்ட அரசர் பெருமக்களுக்கும் இத்தகைய சிறப்புண்டா? இத்தனைக் கல்வடிவம் உண்டா? ஓவியம் உண்டா? இதனினும் தமிழ் நாடு செய்யலாவ தென்ன; அதனை நிலைநிறுத்திக் காப்பாற்றாது இடித்தொழித் தால் எங்குப் போய் நிற்போம்? எங்கே ஒதுங்குவோம்? வானத்தில் போய்த்தான் பறத்தல்வேண்டும்.

ஆஸ்திகம் என்றும் தழைத்து ஓங்குக!
நாஸ்திகம் முற்றும் மறைக!

# ஆஸ்திக வாழ்க்கையை மேற்கொள்ளுங்கள்!

## அறிஞரின் அமுதமொழிகள்.

---

(திரு. கே. எஸ். மணியம் அவர்களின் மொழிபெயர்ப்பு)

[சென்னை "தேசபந்து" 4-5-1929லிருந்து எடுக்கப்பட்டது]

---

"நாம் மனித சமூகத்திற்கும், உலகத்திற்கும் தொண்டு செய்வதனாலேயே நமக்கு சாஸ்வதமான நன்மையைத் தேடிக்கொள்ள முடியும்."

"அரும்பெருங் காரியங்களைச் செய்த பெரியார்கள் தாங்கள் செய்துள்ள மகத்தான காரியங்களைப்பற்றி உரிமை பாராட்டிக் கொள்ளவே மாட்டார். ஆனால், சோம்பேறிகளான மூடர்களே உரிமை பாராட்டுவார்கள்."

—ஸ்வாமி விவேகாநந்தர்.

"அந்தரங்க சுத்தியுடன் எவன் ஆண்டவனைத் தியானிக்கின்றானோ, பணிவாக எவன் அவரைத் தேடுகின்றானோ, அவனுக்குத் தெய்வசகாயம் நிச்சயம் கிடைக்கும்."

"இந்தியாவினிடம் எனக்கு மிகுந்த பற்றும் அபிமானமும் உண்டு. ஏனெனில், எனக்குள்ளான தெல்லாம் இந்தியாவிலிருந்தே கிடைத்திருக்கின்றன. உலகனைத்திற்கும் போதிக்கும்படியான அறிவும், ஞானமும், பாக்கியமும், சக்தியும், கடமையும் இந்தியாவுக்கு உண்டு. வாள்வலியும் தோள்வலியும் சிறந்தன என்று இந்தியா கருதுமாயின் அது எனக்குச் சோதனைக் காலமாகும். அப்பொழுது நான் இந்தியாவை எதிர்த்து நிற்கத் தயங்க மாட்டேன்."

"பாவத்தில் தவறி விழுகின்றவன் மனிதன்; பாவத்தைச் செய்துவிட்டோமே யென்று வருந்தி ஆண்டவனைப் பிரார்த்திக்கின்றவன் ஞானி; பாவத்தைச் செய்வதுமன்றி அதைப் போற்றுகின்ற மனிதன் மிகவும் கொடிய பிசாசே."

—போப்.

"பதினாயிரம் ஆண்டுகள் இந்த உலகில் ஜீவித்திருக்கப் போவதாக நினைத்து நடக்காதே. மரணமானது உனக்காக எப்பொழுதும் தயாராகக் காத்துக்கொண்டிருக்கின்றது. உனது உடலில் உயிருள்ளபொழுதே நீ நல்ல காரியங்களைச் செய்து நல்வழியில் நட. உயிர் உனது உடலை விட்டு நீங்கியபிறகு உன்னால் ஒன்றும் செய்ய முடியாது."

—மார்க்க ஒளரேலியர்.

"மக்களின் துன்பங்களுக்கெல்லாம் காரணம் பிரிவினையேயாகும். மனிதர்கள் ஒன்றான சத்தியத்தைக் கடைபிடித்து உண்மை வழியில் தங்களது வாழ்க்கையை நடத்தாமல் கணக்கில்லாதனவான பொய்களைக் கடைப்பிடிப்பதனால்தான் அவர்களுக்குள் பிரிவினையும் வேற்றுமையும் நிகழ்கின்றன. மனிதர்கள் ஒற்றுமைப்படுவதற்கு ஒரு வழி யுண்டு. அது சத்தியத்தில் ஒற்றுமைப்படுவதாகும். எனவே மனிதர்கள் உண்மையை எவ்வளவுக் கெவ்வளவு தேடுகின்றார்களோ அவ்வளவுக்கு ஒற்றுமையை அடைகின்றார்கள்."

"உண்மை இது என்பதை அறியாது தீமை செய்யும் மக்கள் தாங்கள் தீமை செய்கின்றவர்களுக்கு மட்டுமே தீங்கிழைக்கின்றனர். அவர்களிடம் மற்றவர்கள் வெறுப்புக்கொள்ளவும், அவர்களால் துன்புறுகின்றவர்களிடம் இரக்கங் காட்டவும் இட முண்டு. ஆனால், உண்மையை நன்கு உணர்ந்தும் தீமை செய்துவிட்டு அதுவே, நன்மை என்பதாகப் பாசாங்கு செய்யும் மனிதன் தனக்கும், தன்னால் துன்புறுகின்றவர்களுக்கும் தீமை செய்வதோடு, தன்னுடைய பொய் புரட்டுகளினால் இவ்வுலகிலுள்ள ஆயிரக்கணக்கான மனிதர்களை ஏமாற்றி அவர்களுக்கும் தீங்கு செய்கின்றான்."

—ருஷ்யஞானி டால்ஸ்டாய்.

"இவ்வுலகிலுள்ள நல்லவர்களின் க்ஷேமலாபங்களை ஆண்டவன் தம்முடையதாகப் பாவித்துக்கொள்ளுகிறார். துஷ்டர்களையும், நியநெறிபற்றி நிற்பவர்களையும் கண்டு அவர் நடுங்குகின்றார். துஷ்டர்களையும் நியவர்களையும் அழிக்கவேண்டுமென்றால் அவர் முதலில் அவர்களின் அறிவை மழுங்கச்செய்து அவர்களை இவ்வுலகில் திண்டாடவிட்டு அழிக்கின்றார்."

—ஆர்டஸ்.

PRINTED AT THE "SATYA NESAN" PRESS, MADRAS—May '29.

ஸ்ரீ

ஸ்ரீஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்க ஹநுமத் ஸமேத
ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நமஃ

# இராமாயணப் போராட்டம்

[உயர் திருவாளர்-தே. போ. மீனாட்சி சுந்தரம்பிள்ளை
எம். ஏ., பி. எல்., எம். எல். சி. அவர்கள்
சென்னை 'தேசபந்து' 30-3-1929-6-4-29,
13-4-29-ல் எழுதுவது.]

## ஊமையின் உளறல்

---

இராமாயணம் என்பது இராமன் கதை. இதனை யறியாத குழந்தையும் இந்நாட்டில் இல்லை. இராமாயணக் கதையே ஓர் போராட்டக் கதை. அந்தப் போராட்டக் கதையைப்பற்றிய ஓர் போராட்டக் கதை 'ஒன்று நடக்கின்றது. கதையைக் கற்றோரு கேட்டோ களிக்காது அக்கதை 'திராவிடர் கதை' என்று கறுவியும், 'ஆரியர் கதை' என்று சினந்தும் நின்று கை கலந்து பலர் போரிடுகின்றனர். பார்ப்பனர் கதை என வெறுப்பார் ஒருபுறம்; களிப்பார் ஒருபுறம். தமிழ்க்கதை என மகிழ்வார் ஒருபுறம். இக் கதை இவர்கள் கையில் படும் பாட்டை என் என்போம். "நான் படும் பாடு சிவமே உலகர் நவிலும் பஞ்சுதான் படுமோ? சொல்லத்தான் படுமோ? கான்படு கண்ணியில் மான் படுமாறு கலங்கிகின்றேன். "ஏன் படுகின்றனை" என்றிரங்காய்என்னில் என்செய்வேனே" என்றுஇராமாயணமும் வள்ளலாரோடு சேர்ந்து கதறி யழுகின்றது. வள்ளலார் "திராவிட"னில் படும்பாட்டைப் பின் பார்ப்போம். இராமாயணம் சில குடியரசில் படும் பாட்டைக் கேட்டிருப்

பர். ஆனல், குடியர் அரசுமுதலான பல வல் அரசுகளிடத்திலும் இராமாயணம் படும்பாட்டைச் சிலர் அறியாமல் இருக்கலாம். ஆகவே, இராமாயணத்தைப்பற்றிய போராட்டத்தைச் சுருக்கி யிங்கே எழுதுவோமாக. குருடனுக்கு ஊமை வழிகாட்டிப் போராடிய கதைபோலிருக்கும் இந்தப் போராட்டக் கதை.

குருடனே ஊமையோ கீழ்வரும் கொள்கையைக் கொண்டாடுகின்ருன். போராட்டக்கதையை அறிந்தோமேனும் "இது குருடனது கதை" "இது ஊமையது கதை" என்று வேறு பிரித்தறிய இயலவில்லை.

" இராமாயணம் நம்மூருக்கு ஆரியர் வந்து குடியேறிய கதை. அஃதொரு பார்ப்பனச் சூழ்ச்சி. இராமன் வட நாட்டிலிருந்து வந்தவன். ஆகவே, அவன் ஆரியனே என்பதில் ஐயம் இல்லை. இராவணன் தென் முனையை ஆண்டவன்; ஆதலின், அவன் திராவிடன் என்பதிலும் எவ்வளவு ஐயப்பாடும் இல்லை. ஆகவே, இராமாயணம் தமிழ்ப் பெருமகனை இராவணனை ஆரிய நாடோடியாகிய இராமன் கொன்ற கதையாகும். அம்மட்டோ! அவ்விராமன் செய்த கொடுமை தமிழ்ப் பெருமாட்டியாகிய சூர்ப்பணகையைப் பெண்ணென்றும் பாராது இகழ்ந்தான்? என்ன என்ன செய்தான் ஐயா; அவ்விராமன்? தம் பெண்மக்களை இவ்வாறு இகழ்ந்தவன் கதையைத் தமிழர் படித்துக் களிக்கின்றனரே? இப் பேடிகளை என்ன என்பது? இராவணன் என்ன பொல்லாததுசெய்துவிட்டான். தன்நாட்டிலேயே புகுந்து தன் தங்கைக்கே இழிவு செய்ததுபற்றிப் பழிக்குபழி வாங்க எண்ணினன். சீதையைத் தூக்கிச் சென்று சிறையிலடைத்தான். இராமன் சூர்ப்பணகையைச் செய்தது போல இராவணன் சீதையை ஏதேனும் செய்தானு? ஆரிய ஞரிய வான்மீகி தன் மனம் போனவாறு உளறுகின்ருன்; பழி

தூற்றுகின்றான். ஆனால், உண்மையை யாம் அறிவோம். இரா வணனே குணப்பெருங் குன்று. அவ் வான்மீகியேனும் இராவ ணன் சீதையை வலிய அணைந்தான் என்று எழுதுகின்றானா? அஃதொன்றே அவ் விராவணனின் பெருமையைக் காட்டவில் லையா? தலை வெடித்துப்போகும் என அஞ்சித் தழுவாதுவிட் டான் என்று வான்மீகப் புற்றீசல் பொய்யெழுதி வைத்தது. சீதையை ஒரு பொருளாக நினைத்தானா இராவணன்? அவள் அவனுக்கு அரியவளோ? கற்பிற் சிறந்தாளெனக் கட்டுக் கதை கட்டிவிட்டனர். ஆனால், அவர்களே உண்மையை உரை த்துவிட்டார்கள். பாரோ ஒரு வண்ணான் சீதையைப் பழித் துரைத்தானும். அதுகேட்டு இராமன் சீதையைக் காட்டிற் கனு ப்பினானும். சீதையின் பழியை ஊர் எல்லாம் அறிந்ததால் இராமன் அவளைக் காட்டிற்கு ஓட்டினான். "சீதை தட்டுவாணி" இவ்வாறு சொல்லவும் வாய் கூசுகின்றார்கள் சில தமிழர்கள். அவர்களும் தமிழரோ? அல்ல நடைப் பிணங்களே! இந்தச் சீதையினையா இராவணன் விரும்புவான்? இனி இராமனது ஏற்றந்தான் என்ன? தனக்கொரு தீங்கிழையாத தாடகை யைக் கொன்றான். அதுவே அவனது கன்னிப் போர். முதற் கோணல் முற்றுங் கோணலாக முடிந்தது. சூர்ப்பணகையைப் பெண்ணென்றும் பாராது பெரியோர் இகழத்தக்கன செய் தான். வாலியை மறைந்து நின்று கொன்றான். அதுவே அவ னுடைய வெற்றி. அம்மட்டோ! பார்ப்பனரோடு சேர்ந்து பெ ருந் தவத்தோனாகிய சம்புகனை வெட்டித் தள்ளினானும். ஆனால், அவன் செய்த கொடுமை என்ன? பார்ப்பனரல்லாதானும். அவனுடைய அம்மாவுக்கும் அப்பாவுக்கும் பிள்ளையாகப் பிறந் ததே அவன் செய்த பெருங் கொடுமை. ஆகலால், அவன் தவஞ் செய்தலாகாது. தாய் தந்தையின் பெயரும் அறியாத சீதையே கற்பரசி. இதுதான் "இராம ராஜ்யம்". இவ் விராமன் வெற்றி பெற்ற வழிதான் என்ன? தமிழராகிய வானரர்களும்

விபீஷணனும் உதவி செய்தில்லாவிட்டால் இராமன் என்ற பெயரே இல்லாதபடி அவனை இராவணன் அழித்திருக்க மாட்டானா? இவ்வளவு உதவி செய்த தமிழரை அந்தப் பார்ப்பன வான்மீகி: குரங்குகள் என்றும், அரக்கர் என்றும் வாயார வைகின்றான். இந்தக் கதையைத் தமிழர் படித்தலும் ஆகுமா? தாம் சாக நஞ்சுண்பார் உண்டோ? தம் முன்னோரை இகழும் கதையைக் கையால்தான் தொடலாகுமோ? தொட்டகையை வெட்டி எறியவேண்டும்; படித்த நாவை அறுத்தெறியவேண்டும்; கேட்ட காதில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுதல் வேண்டும்; கண்ட கண்ணைப் பிடுங்கிக்கொண்டு சாதல் வேண்டும். இந்தக் கதை என்று ஒழிகின்றதோ அன்றே இந்நாடு சீர் பெறும். சுயமரியாதை யற்றவரே அக் கதையைப் படிப்பார். இந்தக் கதையைப் படிப்பதே இன்னும் தமிழர்க்குச் சுயமரியாதை இல்லை என்பதற்கு அறிகுறி. இராமன் கதையைவிட்டு இராவணன் கதையைப் படியுங்கள்! அதனைப் புகழுங்கள்! எப்போதோ ஒருமுறைமணந்தான் இராமன்; ஒருமுறை அரசனானான்! அந்தக் கதையை நாள்தோறும் தமிழராகிய நம்மிடமே வந்து கூறி நம்மை இகழும் பார்ப்பனர்காலில் வீழ்ந்து இராமனது அரசேற்றமும் கொண்டாடுகின்றோம். இதனினும் இழிவான செய்கை யுண்டோ? நம்மை இகழ்வோருக்கே எற்றம் கொடுக்கும் இந்நாட்டை என் என்பது? அரசர்கள் ஆண்டிற் கொருமுறை வரி வாங்குகின்றனர் என்று பலர் கூச்சலிடுகின்றனர். ஆனால், இந்த இராமர் வரியை இவர்கள் நாள்தோறும் வாங்குகின்றார்களே. இதற்குக் கேள்வி முறையில்லையா? அதையும் நம்மைச் செருப்பாலடித்துக் கேட்கின்றனரே இனி இராவணன் கதையைப்படித்துப் பார்ப்பனரிடமிருந்து இராவணவரி வாங்கவேண்டும். இராவணனையணம்ஒன்று பாடவேண்டும். ஊமையாயிருந்தகாலம் ஒழிந்தது. ஒவென்று பாடுவோம். இராமன் என்ற பெயர் பூண்டோர் எல்லாம்

இராவணன் என்று பெயர் பூண்டு வாழவேண்டும். தமிழர் தமது மகளிர்க்குத் தாடகை சூர்ப்பணகைஎன்று பெயர் வைத்துக் களித்தல் வேண்டும். இஃது ஒருவர் கதை.

இந்தப் பேச்சுக் குருடன் பேச்சோ ஊமைப் பேச்சோ என்று தொடக்கத்தில் மயங்கினேம். இப்போது இஃது ஊமைப்பேச்சென்பதுஉறுதியாய்விட்டது.ஊமைப் பேச்சினை உலகிலே கேட்டவர் இல்லையே என்றால் இதனைப் படித்தறிக. ஊமை பேசுவதை விளக்கி எழுதுவதென்றால் இயலாததொன்றாம். அதனை இபன்றமட்டும் எழுதியுள்ளோம். இனிக் குருட்டுப் பேச்சினையும் சிறிது கேட்போம்.

---

## குருடன் கதை

நாட்டின் வரலாற்றை ஆராய்கின்றவர்களில் சிலர் இராமாயணத்தைக்கொண்டு நமது நாட்டின் பழங்கதையைஅறிய முடியும் என்கின்றார்கள். ஆனால், அவ்வாறு ஆராய்வது இருட்டறையில் பொருள்களைத் தேடுவது போலும் என்று அவர்களே ஒப்புக்கொள்கின்றனர். அன்றியும், பழங்கதையில் இரண்டொரு குறிப்புக்களே நமக்குப் புலனாகின்றன. மற்றையவற்றை உய்த்துணர்ந்தே அறிதல்வேண்டும். இவர்கள் பழங்கதையைக் கண்டறிவதோடு நில்லாது அதையே வரலாறாகக் கொண்டு இடர்ப்படுகின்றார்கள். தலை சிறந்த பாவலனின் பாட்டாகக் கொள்ளாது அதனையொரு வரலாறாகக் கொண்டு வழங்குகின்றனர். இவர்கள் இராமாயணத்தைப்பற்றி எடுத்துக் கூறும் கதையைக் குருடன் கதை என்று கூறலாம்.

அவர்கள் கதை கீழ்வருமாறெல்லாம் போகிறது.

இராமாயணம் *தமிழ்க்கதை; தமிழன் கதை.* அக்கதை திராவிடர் இந்தியாவிற்கு வந்த கதையே. குரங்குகள் எனப்படு

வோர், தமிழர்க்கு முன் இந்நாட்டில் வாழ்ந்த குடிகள். இராமன் திராவிடன், தமிழன். அவன் பெயரும் தனித் தமிழ். இராமன் என்பதில் இரா என்பது இரவு, இரும்பு, இருந்தை, இரு, இருமண் முதலியவற்றைப்போலக் கருமை என்பதைக் குறிப்பதாகும். மன் என்பது ஆண்பால் விகுதி. ஆகவே, இராமன் என்ற சொல், கருநிறமுடைய பெருமானைக் குறிக்கின்றது. இராமனது நிறமும் தமிழர் நிறமன்றோ? தாஸ்யுக்கள் என்ற திராவிட மக்களின் தலைவனைக் கறுப்பன் (கிருஷ்ணன்) என்ற பெயர்கொண் டழைத்து அவன் ஆரியர்களை ஆட்டி வைத்த கொடுமையை எடுத்துக் கூறுகின்றது ரிக்வேதம். ஆகவே, கண்ணன் இராமன் என்பன தமிழ்க்கடவுளின் பெயர்கள், தமிழ்த்தலைவரின்பெயர்கள். அன்றியும், திருமால்தமிழ்க் கடவுள் அன்றோ? முல்லை நிலத்தில் வாழ்ந்த தமிழ்மக்கள் அவரைத்தானே வழிபட்டுவந்தனர்.

இராவணனே பார்ப்பனன். நேரே மலரவனுாது மரபில் வந்தவன். அவரது பிள்ளையின் பிள்ளை. அவனைக் கொன்ற பழி இராமனைப் பற்றிக்கொண்டதென்றும், அதற்காக இராமர் கழுவாய் இயற்றவேண்டியிருந்ததென்றும் வழங்கும் கதையை நாம் கேட்கவில்லையா? இராவணன் நான்மறை எல்லாம் ஓதியுணர்ந்து உயர்ந்தோன் ஆபவன்; சாமவேதம் பாடிக் கடவுளை மகிழ்வித்தவன். அவனை இராமர் எந்த வில்லால் கொன்றார்? அகத்தியர் என்ற தமிழ் முனிவர் தந்தருளிய தமிழ் வில்லால் அன்றோ கொன்றார்.

அன்றியும், இராமாயணம் பார்ப்பனர் அல்லாதார் வெற்றியையே குறிக்கின்றது; சீர்திருத்தம் வேண்டுவாரின் சிறப்பையே விளக்குகின்றது. வசிஷ்டருக்கும் விஸ்வாமித்திரருக்கும் நேர்ந்த சண்டை, சீர்திருத்தப் போராட்டமேயாகும். வசிஷ்டரும் விஸ்வாமித்திரரும் ஒருவரோடு ஒருவர் முரண்

பட்டு நிற்பதை வேதத்திலும் காண்கின்றோம் விஸ்வாமித்திரர் அகன்ற நோக்கமுடைய பெரியவர்; ஒருகூட்டத்தினர்தான் உயர்ந்தவர் என்பதில் நம்பிக்கை யற்றவர்; வெளியார்களையும் சீர்திருத்தித் தம்முடன் சேர்த்துக்கொண்டு சிறப்படைய வேண்டும் என்றவர். வசிஷ்டரோ அவ்வாறு வெளியாருக்கும் உயர்வு தந்தால் குடி முழுகிப்போகும் என்று அஞ்சினவர். அரசராய்ப் பிறந்த விஸ்வாமித்திரர் செயற்கரியன செய்து அந்தணரிற் சிறந்தவர் ஆயினர். புத்தம் புதியன செய்து பொன்னாட்டாரையும் புறக்கணிக்கும் பேராற்றல் வாய்ந்தவர். அரிச்சந்திரனின் தந்தையாராகிய திரிசங்கு தமது குருவாகிய வசிஷ்டரை எதிர்த்துரையாடியதால், அம் முனிவர் அவ் வரசனைக் கீழோனாகுமாறு சினந்து கூறினர். நிறைமொழி மாந்தராகிய வசிஷ்டரது மறைமொழி அப் பொழுதே அவர் பெருமையைக் காட்டித் திரிசங்குவைக் கீழோ னாக்கிவிட்டது. அவ்வரசர் விஸ்வாமித்திரரிடம் போயினர். இம் முனிவர், அவ்வரசர்மேல் அன்பு கொண்டு அவர் வேண்டியபடியே அவரைப் பொந்திரேபாடு பொன்னுலகத்திற்குப் போக்குவதாக உறுதிகூறி அதற்கு வேண்டியன செய்யப் புகுந்தார். அவரது தவத்தின் மேன்மையால் திரிசங்கு பொன்னுலகு போயினர். பொன்னாட்டினர் பொறுமை கொண்டு, கீழோனாகிய திரிசங்கு தமது நாட்டிற்குள் புகாதபடி அவரைக் கீழே உருட்டிவிட்டனர். கீழே விழுந்தால் மண்டை நொறுங்கப்பெற்றுச் சாவது திண்ணம். ஆதலின், அரசன் விதிர்விதிர்த்து அஞ்சினர். அஞ்சேல் என்று எழுந்தார் விஸ்வாமித்திரர். திரிசங்குவிற்கென்று பொன்னா டொன்று படைத்துத் தந்தனராம். கீழாயினோரும் மேலான இடத்திற்குப் போகவேண்டும் என்ற எண்ணம் இம் முனிவரது உள்ளத்தில் ஊன்றிநின்றது.

இராமாயணமும் விஸ்வாமித்திரரது மேன்மையையே விளக்குகின்றது. இராமரது மனமானது யாரால் உருவாக்கப்பட்டது? யாரிடத்திலே அவர் கல்வி கற்றார்? வசிஷ்டரிடம் கல்வி கற்றது சாலாதென்று விஸ்வாமித்திரரிடத்திற் சென்று முன் படித்ததை எல்லாம் பின் திருப்பிப் படித்தார். விஸ்வாமித்திரர் கற்பித்த கல்வியே, தாடகையையும் பின்னே இராவணனையும் கொல்ல உயிர்த்துணையாகின்றது. இராமரது செயல்கள் எல்லாம் சீர்திருத்தச் செயல்கள் அன்றோ? பெண்கள் கற்பு நெறியினின்று சிறிது தவறினால் அவர்கள் தலையை வெட்டிவிடுவது நல் அறமாகாது என்று இது போதும் சீர்திருத்தம் வேண்டுவார் செப்புகின்றனர். பரத்தையர் என்று இகழப்படுவாரையும் நல்வழிப்படுத்தி அவர்களை நன்னெறியிலே மணந்து வாழ மக்கள் முன்வரவேண்டும் என்கிறார் காந்தியடிகள். விஸ்வாமித்திரரோடு கூடிச் சென்ற இராமர், புறக்கணிக்கப்பட்டுக் கிடந்த அகலிகைக்கு நல்லறிவு கொளுத்தி, நல்வழியிற் செலுத்தி, அவளது அகமுடையானோடு பழைபடி ஒன்றுசேர்த்த கதை சீர்திருத்தக் கதையல்லவா? குடியும் பிறப்பும் கண்டு மயங்கிப்போக வேண்டாம் என்கிறார்கள் சீர்திருத்தம் வேண்டுவோர். இராமர் இவ்வாறு மயங்கியவரா? இவர் யாரை மணந்து வாழ்ந்தனர்? சீதையைத்தான் மணந்தார் என எல்லோருக்குந் தெரியும். ஆனால், சீதையைப் பெற்றெடுத்த தாயார் யார்? தந்தையார் யார்? இதனை வால்மீகியும் அறிந்தார் இல்லை. வயலில் கிடந்தெடுத்த பெண்ணைக் குடியும் பிறப்பும் பாராது இராமர் மணந்துகொண்டனர். இதற்குமேலும் என்ன சீர்திருத்தம் வேண்டும்?

இன்னும், இராமர்: ஜநகன் மகளை மணந்துகொண்டதில் ஓர் ஏற்றமுண்டு. இந்த மணத்தை முடித்து வைத்தவர்

விஸ்வாமித்திரரே யாவர். முதலில் இருந்து முடிவுவரை அவரது சூழ்ச்சியே வெற்றி பெறுகின்றது. மறையவர்களுக்கு மாறுபட்டெழுந்த அரசர் இயக்கம் ஒன்று பழையநாளில் பரவி வந்தது. அவ் வியக்கத்தில் தலை சிறந்து விளங்கி மறையவர்களையும் தம்மோடு சேர்த்துக்கொண்டவர் ஜநகர் ஆவர். அவரோடு அவ் வியக்கத்திலே இராமரையும் சேர்த்து மறையவர் இயக்கமே இல்லையாம்படி பண்ணவேண்டுமென விரும்பினர் விஸ்வாமித்திரர். மறையவர்கள், வேள்வியின் புகையே மேலுலகத்திற்கு வழி என நம்பியிருந்தனர். அரசர்களோ உண்மை எனும் மரத்திற் பழுத்த அறிவெனும் கனியின் இன்பமெனும் சாற்றைப் பருகிக் களித்துக் கடவுளாய்விளங்கினர். ''ப்ரஹ்மவித்தை'' என்பது ''ராஜவித்தை''. அஜாதஸத்ருவிடமிருந்தே முதல்முதல் பார்ப்பனர்கள் அதனை அறியத் தொடங்கினர். அஜாத ஸத்ரு என்ற காசி ராசன், வேண்டுவார் வேண்டியதை எல்லாம் தந்து உதவுவதாகக்கூறி விற்றிருக்கும்போது ஒரு மறையவன் அவனெதிரே இரந்து நின்றான்; அரசனும் 'வேண்டியதனை அஞ்சாது கேள்! கொடுக்கின்றேன்'' என்று உறுதிமொழி கூறினன். உளவறிந்த பார்ப்பனன் மெய்யறிவாம் மேலான இன்பத்தைப்பற்றிய பெருங்கல்வியைத் தனக்குக் கற்பிக்குமாறு வேண்டினன். அகப்பட்டுக்கொண்டான் அஜாத ஸத்ரு.

''இந்தப் பெருங் கல்வியோ அரசரது அருங் கல்வி. இதனை அரசர் அன்றி வேறெவரும் இதுவரை அறிந்ததில்லை. உனக்கு என் வாயை விற்றுவிட்டேன். இனிச் செயலாவதில்லை. உறுதி கூறியபடியே நீ வேண்டியதைக் கற்பிக்கின்றேன்.''

என்று கூறி மறை முடிவை மறையவனுக்குச் சொல்லி வைத்தானாம். உபநிஷதத்தில் காணக் கிடக்கும் இக் கதையில் இருந்தும் பெருங் கல்வி என்று பேசப்படுவதெல்லாம்

பேராசரின் பெருங்கல்வியே என்பது தெளிவாகின்றது இந்தப் பெருங் கல்வியிற் பெரியவனானவன் ஜநகனேயாகும். அரசருக்கே உரியதாகிய அரசாது அரும் பெருங் கல்வியில் அனைவரினும் உயர்ந்தோனாகிய ஜநகனே இராமனுக்கு மாமனாக்கினார் விஸ்வாமித்திரர். அரசர்கள் கண்ட வழியை அனைவரும் அடையும்படி இராமன் செய்பிரான் என்ற உறுதிப்பாடுடன்தான் இம் மணத்தை முடித்துவைத்தார்; இவ்வுறவைத் தேடிவைத்தார். மணத்தின் பின்னேயேமறையவர் இயக்கமும் மறைந்தது. திருமணம் முடிந்து திரும்பி வரும்போதே விஸ்வாமித்திரர் விதைத்த விதை மரமாகிப் பூத்துக் காய்த்துப் பழுத்துப் பயன் தந்துநின்றது. மணமக்களுக்கு எதிரே வந்தவர் யார்? மறையவர் இயக்கத்தின் மாபெருந் தலைவராகிய பரசுராமரேயாவர்; அவர் இராமர் கையில் பட்ட பாடென்ன? பரசுராமர் மறையவரிற் சிறந்தவராய் அரசரை எல்லாம் கொன்று குவித்து அடக்கி ஆண்டுவந்தனர். ஆனல், அவரைக் கொல்லாமலே பழிக்குப்பழி வாங்கினார் இராமர். இம் மறையவரின் செருக்கினை இமைப்பொழுதிலே அடக்கி அரசர்களது பழஞ்சிறப்பினை நிலை நாட்டினார்.

இராமர் பரசுராமரின் செருக்கினை அடக்கிய பெருமையைக் கம்பரும் பாராட்டுகின்றார். அரசருக்கிருந்த பகை எலாம் ஒழிந்ததெனக் கூத்தாடுகின்றார் ஸ்ரீகுலசேகரர்.

"வெவ்வரிநற் சிலைவாங்கி வென்றிகொண்டு வேல்வேந்தர் பகைதடிந்த வீரன் தன்னை"

எனப் பாடுகின்றார். இவ்வாறே கம்பரும் கருதினார் என்று எண்ண இடமுண்டு. சீதை இலங்கையில் சிறைபட்டுக்கிடந்த நாளில் இவ் வெற்றியை நினைந்து வாடிபதாகக்

கம்பர் புனைந்துரைக்கின்றார். சீதை இவ் வெற்றியை அரசர் களது வெற்றியாகவே கொண்டாடினாள் என்று அப் பாடலில் இருந்தும் புலனாகின்றது.

"மழுவின் வாளினன் மன்னரை மூவெழு
பொழுதி னூறிப் புலவுறு புண்ணினீர்
முழுகி னான்றவ மோய்ம்பொடு மூரிவில்
தழுவு மேன்மை நினைந்துயிர் சாம்புவாள்."

என வரும் சுந்தரகாண்டத்துக் காட்சிப்படலப் பாட்டினைப் பாருங்கள். மறையவர்களை இராமன் எவ்வாறு எண்ணினான் என்பது அப் படலத்தில் உள்ள மற்றொரு செய்யுள் நன்கு விளக்குகின்றது. இராமன் தன்னோடு கூடியிருந்தபோது அவர் செய்த மேலான செய்கைகளையும், எண்ணிய இணையிலாத எண்ணங்களையும் நினைத்துக்கொண்டு சீதை வருந்தினாள். அவற்றில் ஒன்று இராமர் காட்டுக்குப் போகையில் நிகழ்ந்ததொரு செய்கை—"இராமர் காட்டுக்குப் போகிறார். எல்லோரும் துன்பக்கடலில் மூழ்கிப் பின்செல்கின்றனர். அந்நிலையில் இம் மறையவர்கள் என் செய்கின்றனர்? இவர்களும் மற்றையவர்களைப்போலப் பின்தொடரலாம். ஆனால், இவர்கள் எண்ணந்தான் என்ன? இராமர் ஆனிரையை யெல்லாம் இவர்களுக்குப் பங்கிட்டுக் கொடுக்கின்றார். அனைத்தையும் இவர்களுக்கே அளித்துவிடுகின்றார். அவர் கையில் ஒன்றும் இல்லை. ஆனால், எல்லோரும் அழுது புலம்பும் அந்நிலையிலும்கூட இம் மறையவர்கள் தமது அவாவினை மறவாது,

"இராமன் போனால் போகிறான் நமக்கு மற்றுமோர் ஆனேனும் கன்றேனும் அகப்படாதா"

எனப் பின் தொடர்கின்றனர். காண்கின்றான் இராமன்; அவர்களது அவாவினுக்கோர் கரை காண்கிலன்; ஜானகியை

நோக்கிச் சிரிக்கின்றான்—இந்தச் சிரிப்பை நினைந்து சிதை வுண்டு நின்றாள் ஜானகி.

"பரித்த செல்வம் ஒழியப் படருநாள்
அருத்தி வேதியர்க்(கு) ஆன்குலம் ஈந்துஅவர்
கருத்தின் ஆசைக் கரையின்மை கண்டு இறை
சிரித்த செய்கை நினைந்(து)அழுஞ் செய்கையாள்."

என்று கம்பனும் வம்பளக்கின்றான். கம்பன் அம் மட்டோடு விட்டான் இல்லை. இராவணன் முதலியோரை இராமர் வாயில் வைத்தே அந்தணன் என்று புகழ்கின்றான். 'சூர்ப்பணகை இராமனைக் காதலிக்கின்றாள். இராமர் அவளைத் தடுத்து என்ன சொல்கின்றார்:— "அம்மையே! நீ அந்தணர் மாது. நானோ அரசன் மகன். நாமிருவரும் மணந்து வாழ்வது இயலுவதொன்றோ?" என்றல்லவோ தடை எழுப்பி நிற்கின்றார்.

"நிந்தனை யாக்கி நீதி நிலையிலாள் வினைமற் றெண்ணி
வந்தன ளாகு மென்றே வள்ளலு மனத்துட் கொண்டான்
சுந்தரி மரபிற் கொத்த தொண்மையிற் றுணிவிற் றன்றால்
அந்தணர் பாவைநீ யான் அரசரில் வந்தேன் என்றான்."

இனிக் கம்பன் இராமரைத் தமிழரசனாக்கித் தமிழ் மரபையன்றோ நிலைநாட்டினான். பழைய அரசிடத்தே கண்ட தமிழ் மரபுதான் என்ன? வேளாண்மக்கள் அரசாது அணிமுடியை எடுத்துத் தந்தால் அவ்வாறு தரப்பட்ட முடியினையே அந்தணர் அரசர்க்குச் சூட்டுவர். ஈதே மரபு. இந்தத் தமிழ் முறைப்படித்தான் இராமரும் முடி சூட்டிக் கொண்டார் எனக் கம்பன் எழுதிவைத்துள்ளான். இவ்வகையால் இராமனையும் தமிழனாக்கி வேளாண்குடியினர்க்கே மேலாம் சிறப்பினைச் செய்தருளினான் கம்பன்.

"அரியணை யனுமன் தாங்க அங்கதன் உடைவாள் ஏந்த
பரதன்வெண் குடை கவிக்க இருவரும் கவரி வீச
விரைசெறி குழலி யோங்க வெண்ணெயூர்ச் சடையன் தங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி வசிட்டனே புனைந்தான்மௌலி."

என்ற பாட்டினை அறியாத தமிழனும் உண்டோ?

கம்பனது தமிழ்க்கதை ஒருபுறம் நிற்க. விஸ்வாமித்திரர் எல்லோரையும் ஒன்றுசேர்க்க வேண்டினர் என முன்னரே கண்டோம். இக்கொள்கையை எதிர்த்துநின்ற மறையவர் இராமன் எதிரே பட்ட பாட்டையும் பார்த்தோம். அனைவரையும் ஒன்று சேர்க்கும் அரும்பெரும் செயலையும் செய்து முடிக்கின்றார் இராமர். விலங்கென்றும் பறவை என்றும் புனைந்துரைக்கப்பட்ட மக்கள் நமது நாட்டுப் பழங்குடி மக்கள் ஆவர். அவர்களோடெல்லாம் அளவளாவி அன்பு பூண்டொழுகி அவர்களையும் தம்முடனேயே மேனிலைக்குக் கொண்டுவந்த பெருமை இராமருக்கே யுண்டு. தீண்டாதவர் என்றும், இழிந்தவர் என்றும் இராமர் ஒதுங்கி நின்றார் இல்லை. அவருடைய அன்பினை என் என்பது ? அங்கதன் இராமரிடத்தே எத்தகைய அன்பு பாராட்டினன் ? தனது தந்தையாகிய வாலியைக்கொன்றவன் இராமனே என அறிந்தும் அங்கதன் அவரிடத்தே அச்சங்கொண்டோடாது அன்பு பூண்டொழுகினன். இவ்வாறு இவன் அன்பு பாராட்டுவதென்றால் இராமர் இவனிடத்தே எவ்வளவு அன்பாக நடந்து கொண்டிருத்தல் வேண்டும். அங்கதன் ஒருவனேயோ அவருடைய அன்புக்கிடமானவன். அவரைக் கண்டவர் அனைவரும் அன்புருவாகி நின்றார்கள். அவர்களோடெல்லாம் இராமர் நட்புக் கொண்டாடினர் என்பது உண்மையாகாது; எல்லாரோடும் உறவுகொண்டாடினர் என்பதே உயர்ந்ததோர் உண்மை. அங்கே இராமர் கதையில் காணப்படுவ

தோர் சிறப்பு. கங்கையைக் கடந்து செல்லப் படகோட்டிய குகன் ஓர் தம்பியாயினன். சடாயு ஒரு பெரிய தந்தையாயினர். சபரியோ உயிரன்ன உறவினராதலின் அவரது எச்சிலையும் இராமர் உண்டு மகிழ்கின்றார். இராமர் வழிபட்ட விபீடணன் முதலான அரக்கர்களும் அவருக்கு ஏற்ற உறவினர் ஆயினர்.

இராமர் சம்புகனைக் கொன்றதிலோர் ஏற்ற முண்டு. சம்புகன்கதை பரசுராமர் கதைபோன்றதென நாம் அறிதல் வேண்டும். இராமரது நோக்கத்திலே மறையவர் அரசர் என்ற பாகுபாடு தொழிலாலும் ஏற்றத்தாலும் பிறந்ததேயன்றிப் பிறப்பாலேயே ஏற்பட்டதன்று. மறையவர் குடியிற் பிறந்தவனும் தனது தகுதி யின்மையால் கீழ்க்குடியவனுக் கேடுறுவான். மேற்குடியிற் பிறந்தும் தகுதியின்மையால் கிழ்க்குடியிற் பிறந்தும் தகுதியின்மையால் கீழ்க்குடியினனானவன். மேற்குடியினரது செயலை மேற்கொள்வது உலகை வஞ்சித்துப் பிழைப்பதாகும். சம்புகன் என்ன செய்தான்? தவஞ் செய்யப் புகுந்தான். ஆனல், அவனோ அதற்கேற்ற தகுதி ஒருசிறிதும் இல்லாதவன். அம்மட்டோ? தனக்குத் தவம் செய்யும் தகுதி யில்லை யென்பதைத் தானே உணர்ந்தவன். அவ்வாறு உணர்ந்திருந்தும் தவ மேற்கொள்ளுவது, புலி ஆவின் தோலைப் போர்த்துத் திரிதல் போலாம். கூடாவொழுக்கத்தைப்பற்றித் திருவள்ளுவர் சொல்லிய தனைத்தும் இவனுக்கே பொருந்தும். மறையவனுனும் கிழான நிலையில் நின்றும் உயர்நிலையடைய ஒரு தகுதியுமில்லாதிருக்கவும் உயர்நிலை யடைந்தான்போல உலகை வஞ்சிக்கப் புகுந்தால் அவன் தலையை வெட்டுதல் வேண்டும் என்பதே இராமர் கையாண்ட முறை. வேறொருவருக்கும் இல்லாத உயர்வு பண்டைநாள் தொட்டு இந்நாள்வரையில்

தவம் பூண்டாருக்கு இந்நாட்டில் உண்டு. ஆகவே, இராமர் கையாண்ட முறையைக் கையாளாவிடில் உலகினை வஞ்சிக்கும் கொடியோர்கள் உள்ளே யிருந்து உலகினர் உயிருக்கே உலைவைத்து வெளியே போர்த்து தவம் பூண்டவர்போலக் கூத்தாடிவருவர். சம்புகன் கதையில் காணக் கிடக்கும் இக் கருத்தினை யறியாத ஒட்டக்கூத்தர் சம்புகனைப் பிறப்பில் சூத்திரன் ஆதலின் கொலையுண்டான் என்று பாடிப்போகின்றார். சூத்திரரினும் கீழான வேடர் குடியிற் பிறந்த வான்மீகி தவம் பூண்டு பெரியோராய் விளங்கிநிற்க அப் பெரியாரே ஒட்டக்கூத்தர் பாடிய கதைபோலச் சம்புகன் கதையைப் பாட முடியாதன்றோ? அப் பெரியார் தமக்கொரு முறையும் பிறர்க்கொரு முறையும் வகுப்பாரோ? உத்தரகாண்டத்தை வான்மீகர் பாடவில்லை என்று பல பெரியோர் முடிவுகட்டியுள்ளார். அதுபற்றியன்றோ கம்பரும் திருமுடி சூட்டுவதோடு இராமன் கதையை முடித்துக் கதையைப் படிப்பாருக்குப் பயனும் பாடி முடிக்கின்றார். இதுநிற்க. இதுவரையும் கூறிவந்ததில் இருந்தும் இராமன் கதை, பரசுராமன் சம்புகன் போன்ற பார்ப்பனரை அடக்கியாண்ட கதையாகவே விளங்குகின்றது.

அம்மட்டுமா ? இராமர் கதையே தமிழர் தமிழ்நாடு புகுந்த கதையாகும். இராமன் கதையிலே வடநாட்டைப் பற்றிய பேச்சு நாட்டுப் படலத்தோடும் நகரப்படலத்தோடும் முடிவடைகின்றது. அதன்பிறகு தென்னாட்டைப்பற்றித்தான் பாடல்கள் எல்லாம் புனைந்துரைக்கின்றன.

பழையநாளில் பாட்டிக் கதைகளாக வழங்கி வந்தவற்றைத் திரட்டிக் கோவை செய்தனர் முன்னிருந்த பெரியோர்கள். அவ்வாறு திரட்டியவர்கள் புத்தர்களானதால் அக் கதைகளைப் புத்தரின் பழம்பிறப்பின் கதைகள் எனப் போற்றிப் புகழ்ந்தனர். அக் கதைகளிற் பழைய இராமர்கதை ஒன்று வருகின்றது. புத்தர் பெருமான் முன்னொரு பிறப்

பில் இராமனாகத் தோன்றினாராம். தசாதன் ஜாதகம் என்று அக் கதைக்குப் பெயர். சிற்றன்னை செய்த கொடுமையால் இராமனும் சீதையும் இலக்குமணனும் காட்டுக்குப் போகின்றனர். ஆனால், அவர்கள் போவது தென்னாட்டிலுள்ள காட்டிற்கல்ல. வடநாட்டில் பனிமலைச் சாரலிலுள்ளதொரு காட்டிற்கேயாகும். பரதன் அவரை நாடிச் செல்கின்றான். தந்தை இறந்ததை அறிவிக்கின்றான். அறிவிற் பெரிய இராமர் ஒருவரே கலங்காது நிற்கின்றார். மற்றையவர் எல்லாம் துன்பத்தால் மனம் மாழ்கி வீழ்கின்றனர். பின்னர் பரதன் என்ன வேண்டியும் பதினான்காண்டு கழிவதன்முன்னர் நாடுவழி திரும்பிப் பார்க்கவும் முடியாதென்று இராமர் உறுதி கூறுகின்றார். பதினைகாண்டு முடிந்ததும் பாரினை யாள வருகின்றார். ஈதே அந்தக் கதை. இக் கதையிலே இராவணனைப்பற்றிய பேச்சே இல்லை என்பதை யாவரும் உணர்வர். முன்னாளில் இல்லாத இராவணன் கதைபின்னாளில் இராமன் கதைக்குள் எவ்வாறு நுழைந்தது? மேனாட்டறிஞர்கள் இந்த இராவணன் கதையவனர் நாட்டிலிருந்து வந்த கதையென முடிவு கட்டுகின்றனர். ஹேலன் என்ற பெண்ணை ட்ராய் என்றபட்டினத்து அரசன் தூக்கிச் செல்லவே அவளை மீட்டுவர க்ரேக்கர் தண்டெடுத்துச்சென்ற கதையே யவனர்களது அரும் பெருங்கதை. அந்தக் கதையை நம் நாட்டினர் தமக்கேற்றவாறு திருத்தி யமைத்துக்கொண்டனர் என்பர்வேன்பர் முதலானமேனாட்டுஆராய்ச்சியாளர்கள். இம் முடிவினை நாம் ஒப்புக்கொள்வதற்கு ஒரு பெருந்தடையுளது. உள்ளூரில் இல்லாமற்போனால் அன்றோ கப்பலேறிப் போய்க் கடன் வாங்கவேண்டும்? நமது நாட்டிலே இக் கதை வழங்கு வருகிறபோது யவனர் கதை என இதை எண்ணி மருளுவானேன்?

ஸ்ரீராமசந்திரர் திருவடிவாழ்க.



ஆஸ்திகம் என்றும் தழைத்து ஓங்குக!
நாஸ்திகம் முற்றும் மறைக!!

ஸ்ரீ ஆதிமூலம் பிரஸ், சென்னை:—1929.

உ
கடவுள் துணை

# திருஞான சம்பந்தர் கொலை பாதகரா?

---

[சென்னை "தேசபந்து" பத்திராசிரியரும், சென்னை ஆஸ்திகச் சங்கத் தலைவருமான உயர் திருவாளர்—சதாவதானம் தெ. கிருஷ்ணசாமிப்பாவலர் அவர்கள் தமது 'தேசபந்து'வில் (30-3-1929)-ல் எழுதுவது.]

'வேதநெறி செழித்தோங்க மிகுசைவத் துறை விளங்க'

திருவவதாரம் செய்த எங்கள் சிவக்கொழுந்தை, திருஞானசம்பந்தப் பெருமானை, இதுகாலை தீயமாக்கள் வெளிப் போந்து; அருளற்றவர் என்றும், அறக்கொடியர் என்றும், கொலைபாதகர் என்றும் கத்துவதைக் காதுகொடுத்தும் கேட்கின்றோம்; கண்களால் அப்பட்டிமாக்கள் எழுதுவனவற்றைக் காண்கின்றோம்; வாயால் கூசுதலற்றுப் படிக்கவும் செய்கிறோம்; சைவர்கள்என்றும்உலாவித் திரிகின்றோம். அந்தோ! தாய்மரபு தந்தைமரபு தெரியாத தான்தோன்றிக் கூட்டத்தினர் இங்ஙனம் அகங்காரம் கொண்டு சொல்வனவற்றையும் எழுதுவனவற்றையும் கண்டித்தெழுதுமாறான பணியையோ இறைவன் எனக்கு அளித்தல்வேண்டும்! பல அன்பர்கள், கல்வியறிவு சிறிதும் இல்லாத இக்கயவர் கூற்றைக் கண்டித்தெழுதும்வண்ணம் என்னைப் பலகாலும் இடித்தெழுது

கின்றனரே! எம்பெருமானை, அன்பே உருவான அருட் குழவியை, அம்மையின் திருமுலைப்பால் உண்டு அமுதவாரிதியைத் தமிழ்நாட்டில் பெருகுவித்த எங்கள் ஐயனை, ஆளுடைய பிள்ளையை: மூளையற்ற மடையர்கள் ஏதோ உளறி வழிந்தால், அதையுமோ நாம் பொருட்படுத்தவேண்டும்? இங்ஙனம் கூறும் மூர்க்கர்கள், உண்மையில் உண்மையறியும் வேட்கை யுடையவர்கள் அன்றே! மடையர்களாகவும், நாடோடிகளாகவும், போக்கிரிகளாகவும் பூர்வாஸ்ரமத்தில் இருந்தவர்கள் எல்லோரும்: இதுபோது மேடைப்பிரசங்கிகளாகவும், தலைவர்களாகவும் வந்து தங்களைப் பிறர் பெரியவர்கள் என்று நினைத்துக்கொள்ளட்டும் என்ற எண்ணத்துடன், இவ்வாறு நமது பெரியோர்களை நிந்தனை செய்கின்றனர் என்பதை எவரே அறிபார்? இவர்கள் நம் பெரியோர்களை நிந்திக்கும் காரணமாக: இனி கழுதைகளாகவோ, பன்றிகளாகவோ, நாய்களாகவோ பிறப்பெடுப்பார்கள் என்பது நமது சாஸ்திர உண்மையே எனினும், இதுகாலையிலேயே அவர்கள்: கழுதைகளாகவும், மலமுண்ணும் பன்றிகளாகவும், ஈனசாதி நாய்களாகவுமே நம்மிடையில் மதிக்கப்படுகின்றனர்.

இந்து மதத்தினரே! இந்தப் பாதகர்கள் திருஞான சம்பந்தப் பெருமானை மட்டுமன்று, நமது வணக்கத்திற்கு உரியவர்களாகிய நமது பெரியார்களை, ஞானப்பிழம்பான நமது ஆழ்வாராதியரை வாய்க்கு வந்தவண்ணம் இகழ்கின்றனரே! உங்களுக்கு இரத்தம் கொதிக்கவில்லையா? உங்கள் பொன் பெண் பணிவி முதலானவற்றிலும் நமது மதம் சிறப்புடையது எனக் காத்தல் உங்கள் கடமையல்லவா ? எங்கே போயது உங்கள் ஆண்மை? எங்கே போயது உங்கள் மானம்? உங்கள் மானம் போனபின் உயிரிருந்தென்? இறந்தென்? நீங்கள் இந்தப்

புழுத்த நாயினும் கடைகெட்ட மாக்கள் கூற்றைக் கேட்டும் வாளா இருக்கும் மாண்புதான் என்னே! அவர்கள் உங்க ளிடையே இவ் விஷயங்களைக் கக்குவதுடன் அமையாது, ஒன் றுமறியாத பள்ளிப்பிள்ளைகளிடையேயும் இத் தீய உணர்ச்சி யை உண்டுபண்ணிவிடுகின்றனரே!

ஏ நாத்திகப் பதர்களே! உங்களுக்கும் ஒருகாலம் வந்ததே! கல்வி யில்லை, கேள்வி யில்லை—ஒன்று மில்லை. தடி மரங்கள்போல் சபைகளில் பேச வந்துவிட்டீர்கள்! இவ்வள வையும் உண்மை யென ஒப்புக்கொண்ட உங்களுக்குச் சாஸ் திர விசாரணை யேன்? சமய விசாரணை யேன்? எங்கள் சமயா சாரியர்களைப் பழிக்கப் புறப்பட்ட புட்டுக்கூடை முண்டங்க ளில் பொறுக்கி யெடுத்த முழு முண்டங்களே! எங்கள் ஆளுடைய பிள்ளையை அருட்பிழம்பைக் கொலைபாதகன் எனக் கூறும் உங்கள் குறும்புதான் என்னே! இவ்வளவு வரையில் உங்கள் அகங்காரம் மேலிட்டதால் அன்றோ நான் வெளிக்கிளம்ப வேண்டியவனானேன்.

ஏ மடையர்களே! பின் விளைவறியாப் பேதைகளே! எங்கள் ஞானச்செல்வனை, எங்கள் உடல் பொருள் ஆவியைத் தனதாக்கிக் கொண்ட எங்கள் ஆண்டவனை, உம்போன்ற மடையர்களும் உள்ளன்புடன் படித்த அளவிலேயே உள்ள த்து மாசு போக்கி உணர்வே வடிவான இறைவனுடன் ஒன்றுக்கும் உயரிய நிலையை அளிக்கவல்ல ஆநந்தப் பாக் களை அருளிச்செய்த எங்கள் அப்பனை, தாவில் சராசரங்க ளெலாம் சிவம் பெருக்கும் பிள்ளையையும் பிறரையும் தூஷிக்க முன்வந்த உங்களை இனிச் சும்மா விடேன். ஒன்று உங்கள் கூட்டமாவது அடியுடன் இல்லாது மறைதல் வேண்டும்; அல்லது நானாவது மடிதல்வேண்டும். ஏ

மனித உருக்கொண்ட தடிமரங்களே! எங்கள் திருஞான சம்பந்தப் பெருமானை மதிக்க மதிதான் உங்கட்கேது? பகுத்தறிவு பகுத்தறிவு என்று கத்தும் உங்கள் குழுவினருக்குப் பகுத்தறி வுண்டாயின், பாழான இவ் வழியில் விழமாட்டீர் கள் அன்றோ?

தொண்டர்மனங் களிசிறப்பத் தூயதிரு நீற்றினெறி
எண்டிசையுந் தனிநடப்ப ஏழுலகுங் களிதூங்க
அண்டர்குல மதிசயிப்ப அந்தணரா குதிபெருக
வண்டமிழ்செய் தவநிரம்ப மாதவத்தோர் செயல்வாய்ப்ப.

—பெரியபுராணம்

திருவவதாரம்செய்த எங்கள் வள்ளலைக் கொலைபாதகன் எனக் கூறும் உங்கள் கொலைஞர் கூட்டம் கூண்டுடன் அழிந்துபட்டது!பட்டது! நான் தொழும் தெய்வமே திருஞானசம்பந்தன். அப் பெருமான் வேறு, உண்மையறிவானந்த உருவான எங்கள் இறைவன் வேறு அல்ல. நீங்கள் அவதாரங்களின் அற்புதங்களை அறியும் ஆற்றல்தான் உண்டோ? தருமம் தேய்ந்து அதர்மம் வளரும் காலையில் ஆண்டவன் அவதாரம் ஏற்படுவது உங்கள் மூளையில் ஏறுவிட்டால், மூலைதேடி முட்டிக் கொள்கிறதுதானே? வேதசிந்தனையும் சைவசிந்தனையும் மேலிட்ட காலத்தே, இற்றைக்கு ஆயிரத்து முந்நூறு ஆண்டுகளுக்கு முன் எங்கள் திருஞானசம்பந்தர் சீகாழிப் பதியில் திருவவதாரம் செய்தனர். இவரை உங்கள் அறிவற்ற குழுவினர், ஆரியர் என்று கூறவந்த ஆதாரந்தான் என்ன? எங்கள் பெம்மானை ஆதிசங்கரர் தாம் அருளிய சிவாநந்தலஹரியில் திராவிடச் சிசு என்று கூறியுள்ளதை மடையர்களே! தெரிந்து கொள்ளுங்கள்! ஆரியர் ஒருவரே எங்கள் செல்வக்குழந்தையைத் திராவிடச்சிசு என்று அழைக்கும் சான்று ஒன்று போதாதோ, அவர் தமிழர் என்பதை வற்புறுத்த? தமிழர்களையே

வாழ்விக்க வந்ததாக வாய்கொழுத்துப் பேசவந்த வகைகெ ட்ட முண்டங்களாகிய உங்கள் மூளையில், தமிழரை, தமிழர் தெய்வத்தைத், தமிழ்ப் பெரும் புலவனைக் குறை கூறுகின்றோமே என்ற எண்ணம் எங்கிருந்து வரும்? திருஞானசம்பந்தர், தமது மூன்றுவது ஆண்டில், ஞானப்பாலுண்டு பாடினர் என்பதற்குப் புறச்சான்று வேண்டும் என்கிறீர்? வேதம் இல்லை, சமயம் இல்லை, கடவுள் இல்லை யென்ற உங்களுக்குப் புறச் சான்று எதற்கு? எங்கள் சமயத்தின் உண்மை விளங்கினல் அன்றோ, உங்களுக்குத் திருஞானசம்பந்தர் மூன்றுவதாண் டில் ஞானப்பாலுண்டு பாடியது உண்மை யென்பது பெறப் படும். எங்கள் இறைவன் நினைத்ததைச் செய்து முடிக்கும் ஆற்றல் அமைந்தவன்; அவனல் முடியாத காரியம் ஒன்று மில்லை. அவன் சாதாரண மக்கள் செய்வனவற்றை யும் செய்வன்; செயற்கரியனவற்றையும் செய்வன்; என வே, இறைவன் அவதாரமான எங்கள் திருஞானசம்பந்தர் மூன்றுண்டில் பராசக்தியின், லோகமாதாவின் ஞான ப்பா லுண்டு அமுதப்பாடல்கள் பாடியதில் என்ன ஐயம் ஏற்படுகிறது? ஆம், உங்களுக்கு இறைவனை யில்லாத போது இக்கூற்று உடம்பாடாகாதுதான். எ முழு முண்டங்க ளே! மேனுட்டு வைத்ய சாஸ்திரிகள் எழுதிய நூல்களுள் ஒன்றுகிய புலோரல் எழுதிய ஆராய்ச்சி நூலில் மூன்று வயதுடைய ஆண்குழந்தை பெண்ணின்பத்தை விரும்பித் தொழில் புரிந்தது என்று எழுதிய விஷயத்தைப் பொய் யென்று நீங்கள் சொல்ல முன்வருவீர்களோ? வந்தால், உங்க ளை மூளைகெட்ட முழுமுண்டங்களென்று அவர்கள் உங்கள் முகத்தில் காரி உமிழ்வார்களே! மூன்றுண்டில் போக இச்சை எங்கேனும் உண்டாக இயலுமா? இது கட்டுக்கதை யென் றன்றோ பலரும் நினைப்பர். கண்டதாக எழுதியதற்குப்

பொறுக்கிபெடுத்த முண்டங்கள்மேலும் புறச்சான்றுவேண்டு மெனப் பகரும்போதும்.

இனி, அப் பெருமானைக் கொலைபாதகர் என்று மடையர்கள் கூறும் கொள்கையை ஆராய்வோம். இதை நாம் வெட்டிப்பேசுவதா? அன்றி ஒட்டிப்பேசுவதா? படியாத மடையர்களே! இவ்விஷய மொன்றை வெட்டிப்பேசியும் ஒட்டிப் பேசியும் உங்கள் வெள்ளறிவை வெளிப்படுத்துகிறேன்.

திருஞானசம்பந்தர்: சமணரைக் கழுவேற்றினர்—ஆதலின், அவர் இரக்கமற்றவர், அருளற்றவர், ஜீவகாருண்ய மற்றவர், கொலை பாதகர் என்று சொல்கிறீர். நீங்கள், சமணரைக் கழுவேற்றினர் என்பதை எங்குத் தெரிந்து கொண்டீர்? இதுபோன்றவிஷயங்கட்குச் சரித்திரங்கள் ஆதாரமா, அல்லது புராணங்கள் ஆதாரமா? சமணர் கழுவேற்றப் பட்டார் என்பதற்கும், இராமாநுஜர் மைசூருக்குப்பயந்தோடிப் போய் மறைந்துகொண்டார் என்பதற்கும் சரித்ர வாயிலாக ஆதாரம் ஒரு சிறிதும் இல்லை. தேவாரத்திலும் ஒரு சொல்லேனும் கிடையாது. இச் சம்பவங்கள் நிகழ்ந்ததாகக் கூறும் காலம், இந்துதேசச் சரித்திரக்காரர்களுக்குப் புறம்பானதல்ல. திருஞானசம்பந்தப் பெருமான் இருந்தகாலம், ஆறுவது நூற்றாண்டின் முற்பகுதியேயாகும். இந்த முற்பகுதியில், அதாவது திருஞானசம்பந்தரது காலத்தில், சீனதேசத்து யாத்ரிகரான ஹியோன்ஸ்டன் என்பார் வந்திருக்கிறார். அவர் கி. பி. 640-ம் ஆண்டில் இந்த நாட்டில் வந்தனர் என்பதும், அக்காலையில் நமது நாட்டு நிகழ்ச்சிகள் பலவற்றையும் விடாது தமது குறிப்புப் புத்தகத்தில் எழுதினர் என்பதும் மறுக்கப்படாதனவாகும். எண்ணாயிரம்சமணரைக் கழுவேற்றியது உண்மையாக விருந்தால், இதுசாதா

ரண சம்பவம் என்று அவர்விட்டிருக்கமாட்டார். அன்றியும், புராணங்களை ஆதாரமாகக்கொண்டு சொல்கிறோம் என்றால், எந்தப் புராணம் ஞானசம்பந்தரே கழுவில் ஏற்றியதாகச் சொல்கிறதென்று கேட்கிறேன். திருஞானசம்பந்தரது பிரபாவங்களைக் கூறும் புராணங்கள் பல. அவற்றுள் பரஞ்சோதியார் அருளிய திருவிளையாடற் புராணம் தவிர மற்றையவெல்லாம், சமணர் கழுவேறிய கதையென்றே சொல்கின்றன. திருப்பெருந்துறைப் புராணத்துள், சமணர்கள் கழுவேறிய படலம் என்றே உளது. இந்தப் பரஞ்சோதியாருக்கு முன் நானூறு வருஷங்களுக்கு முன்னிருந்த பெரும்பற்றப்புலியூர் நம்பி பாடியருளிய திருவிளையாடல் உள்ளும் அவ்வாறே உள்ளது. இனி பரஞ்சோதியார் அருளிய திருவிளையாடலினும், பிள்ளையார் இரக்கமற்றவராய் இருந்தனர் என்பது காட்ட ஒரு ஆதாரமும் இல்லை. அவர் அருளே உருவாய் அமைந்தவர் என்பது பின்வரும் கதையால், சாமான்ய அறிவுபடைத்தவர்களும் தெரிந்துகொள்வர். பாண்டியமன்னன் சமண சமயத்தில் ஈடுபட்டிருப்பது கண்டு வருந்திய அவனது மனைவியாகிய மங்கையர்க்கரசியார் பிள்ளையாரை வரவழைத்தார். திருஞானசம்பந்தப்பெருமான் தமது பதினாறாயிரம் திருக்கூட்டத்தாரோடு மதுரைப் பதியடைந்தனர். சுவாமிகள், தமது அடியாருடன் தங்கியிருந்த மடத்தில், கொல்லாவிரதிகளென மேல் வேஷம் போட்ட சமணர்கள் தீ வைத்தனர். எங்கள் பெருமான் தங்களைக் கொல்லவந்த சமணர்களுக்குப் புத்தி கற்பித்தல் கூடாதென்பது அற ஒழுக்கம் போலும்! ஒருவன் தனக்குத் துன்பம் செய்வானானால் அவனைப் பொறுக்கவேண்டுமென்பது, அறிஞர் கடனே. அவனே, ஒரு கூட்டத்தினருக்குத் தீங்கை விளைவிப்பானாயின் எதையும் செய்யலாம் என்

பது அறநெறியே. கொலையும் செய்யலாம், பொய்யும் பகர லாம். ஆனால், அச் செய்கைகளால் பிறர்க்கு நன்மை உண் டாதல் வேண்டும். இதுபற்றியே, நமது தெய்வப் புலவ ரும்,

திருக்குறள்-அறத்துப்பால் துறவியல் அதி-௩௦-வாய்மை-௨-குறள்.

"பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்."

என்று கூறினர். தனக்கென எவனேனும் இச் செயல் களைச் செய்தலாகாது என்பதே அறநெறி. பிறர் நன்மையை நாடிச் செய்யும் இக் கார்யங்கள் கூடா என்றால் தமிழ் நூல்களுள் கூறிய அறப்போர்களுக்கும் பொருள் இல் லாது போய்விடும். துஷ்டநிக்ரஹம் செய்வது, ஒரு சமு கத்தின், ஒரு நாட்டின் நன்மைக் கேற்றதாயின், அது செய்தலாகாதெனக் கூறுவோர் மடையர் அன்றோ? தன் னல எழுச்சிகொண்டு, இத் தொழிலைச் செய்தல் கூடா தென்பதே கருத்து. எமது திருஞானசம்பந்தர் என்ன தன்னலம் கொண்டு இக் கார்யத்தைச் செய்தார் என்று சொல்ல முடியும்? இனி, அப் பெருமான் அத் தொழிலைச் செய்யவே யில்லை யென்றுதானே, சரித்திர மும் புராணங்களும் சொல்லுகின்றன. கழுவேற்றிய படலம் என்றுகூறிய பரஞ்சோதியாரும், எங்கள் பிள்ளையாரது கரு ணையை வெளிப்படுத்துகிறாரே யன்றி, அப்பழியைஅவர்மேல் ஏற்றவில்லையே. சுவாமிகள், தங்கள் கூட்டத்தாரை அழிக்கச் சமணர்கள் எழுப்பிய தீயைக் கண்டு, பாண்டியனை நல்வழிக் குக் கொண்டுவரும் உயர் நோக்குடன்,"அத் தீ எங்களை ஆதரி யாது, எங்களுக்கு இன்னல் விளைக்கக் காரணமான மன் னனைப் பைய அடைக" என்றார். உடனே பாண்டியன் வெப்பு நோய் அடைந்தான். சமணர்கள், தங்கள் வைத்திய மந்திர சிகிச்சையைக் கையாடினர். ஒன்றும் பலிக்கவில்லை. கடைசி

யில் எமது பெருமான், அவ் விரக்கமற்ற சமணர்களிடையே திருநீறு கொண்டு மன்னது வெப்பு நோயைப் போக்கினர். மேலும் சமணர்களுக்குப் பொறாமை பொங்கியது. பிள்ளையாரை வாதுக் கழைத்தனர்; தீயில் ஏடிடவேண்டு மென்றனர். சமணர் இட்ட ஏடு தீய்ந்து சாம்பராயது; பிள்ளையார் இட்ட ஏடு பச்சைப்பசேர் என்று இருந்தது. மன்னவன்: ஸ்வாமிகள் பக்தனானன்; சமணர்களை வெகுண்டான். சமணர், ஸ்வாமிகளை மூன்று முறையாக வாதுக் கழைத்தனர். மற்றையோர் வேண்டாமென்ற காலையிலும் பிள்ளையார் இசைந்தனர். இம்முறை ஒவ்வொருவருடைய கொள்கையையும் எழுதி நீரில் இடவேண்டும் என்பதும், உண்மைக் கொள்கையுடைய ஏடு எதிரேற வேண்டும் என்பதும் சமணர் விருப்பம். தள்ளையார் உடன்பட்டார். இரண்டு ஏடுகளும் வைகையாற்றில் இடப்பட்டன. பிள்ளையார் ஏடு எதிரேறியது. சமணர்கள் தோற்றதால் ஒப்பந்தப்படி கழுவேற வேண்டியதே. அதுகாலை திருஞானசம்பந்தர் வாக்காகப் பரஞ்சோதியார்:

“இன்னும் அறத்தால் இசைக்கின்றேன்
நீர்ஏன் வாளா இறக்கின்றீர் ?
அன்னை யனையான் எம்மிறைவன்
அவனுக் காளாய் உய்ம்மின்கள் !
என்னை யேடா சிறியாய்நீ
எவ்வா எங்கட் கிவ்வா றடாதமொழி
சொன்ன யென்று மானமுளோர்
கழுவி லேறத் தொடங்கினர்.”

—திருவிளையாட்ற்புராணம்

என்று சொல்கின்றனர். இதனால் அதுபோதும் ஸ்வாமிகள் அருளுடன் கூடியவராய், ‘எதற்காக நீங்கள் வீணாகச் சாகப்

போகிறீர்கள்! தாயினும் கருணையுடைய எங்கள் இறைவனைப் போற்றுங்கள்! என்றுதானே சொல்வதாகச் சொல்கிறார். கடைசியாக மானமுடைய ஒருசிலர் தாமாகவே கழுவில் ஏறியதாகச் சொல்லப்படுகிறது. கழுவேற்றிய படலம் என்ற பரஞ்சோதியார் திருவிளையாடலிலும் சமணர் தாங்களே, அவர்களுள்ளும் மானமுள்ள ஒருசிலர் தாங்களே கழுவேறினர் என்றும், மற்றையோர் திருநீறு அணிந்து வைசராயினர் என்றுமே சொல்லப்பட்டுள்ளது. இனி, பெரிய புராணத்துள்ளோ, ஸ்வாமிகள் முதலில் பாண்டியனது வெப்புநோயைத் தீர்த்தும், தீயில் ஏடிட்ட வாதத்தில் வென்றும், மேலும் சமணர்கள் அவரை மற்றொருவகை வாதத்திற் கழைத்ததாகவும், அதுபோது குலச்சிறையார் என்னும் பாண்டியனது மந்திரியார், வாதத்தில் இம்முறை தோற்றவர் என் செய்வதென்ன? பொறாமை காரணமாகத் தங்கள் வாய் சோர்ந்து தாமே தனிவாதில் அழிந்தோமாகில், வெங்கழுவேற்றுவா னிவ்வேந்தனே என்று சமணர்கள் கூறியதாக உள்ளது. ஈண்டும் கழுவேற்றிய விஷயம் ஸ்வாமியின்மேல் ஒருசிறிதும் ஏற்படவில்லை. தெய்வப்புலமைச் சேக்கிழார், அது செய்தது மன்னவனே யென்பதை,

"மன்னவன் மாறன் கண்டு மந்திரியாரை நோக்கித்
துன்னிய வாதி லோட்டித் தோற்றவிச் சமணர் தாங்கண்
முன்னமே பிள்ளை யார்பா லனுசித முற்றச் செய்தார்
கோன்னுனைக் கழுவிலேற முறைசெய்க."

—பெரியபுராணம்

என்று கூறியவற்றால் அறியலாம். இனி, அங்ஙனம் வன்னெஞ்சம் கொண்டு அத் தொழிலைச் செய்ய ஏவிய மன்னனுக்கு, ஸ்வாமிகள் கருணையிருந்தால், புத்தி சொல்லலாகாதோ என்டார். கள்ளர்களுக்கும் கொலைஞர்களுக்கும் இது காலையில் நீதிபதிகள் தூக்குத் தண்டனைகளைத் தந்தால், அவர்களையும் இரக்கமற்றவர் கொலைபாதகர் என்று இந்த மதி

யற்ற மடையர்கள் சொல்வார்கள் போலும். மன்னன் ஏவிய காலையில், ஸ்வாமிகள் அவனைத் தடைசெய்யாதிருந்ததற்கும் தெய்வச் சேக்கிழார் காரணம் கூறாமற் போகவில்லை. இது போன்ற ஆபாசக் கேள்வியைக் கேட்கும் மடையர்களும் இருப்பரென்பது அவர் அறியாததன்று. அதுபற்றியே அவர்,

"புகலியில் வந்த ஞானப் புங்கவர் அதனைக் கேட்டும்
இகலில ரேனினும் சைவ ரிருந்துவாழ் மடத்திற் றீங்கு
தகவிலாச் சமணர் செய்த தன்மையாற் சாலு மென்றே
மிகையிலா வேந்தன் செய்கை விலக்கிடா திருந்த வேலை."

என்ற பெரியபுராணப் பாசுரத்தால் விளக்கியருளினர்.

சைவர் கூட்டத்தைத் துன்புறுத்திய காரணம்பற்றியே, மன்னன் செய்கை மிகையாகாது என்று பிள்ளையார் வாளா இருந்தனர் என்பதனாலும் அவரது அருட்குணம் விளங்கவில்லையா?

நமது நாட்டில் இதுபோது நீதிச்சபைகளில் கொலைஞரைக் கொல்வது எதுபற்றி? நாட்டிற்கோ சமூகத்திற்கோ அவர்கள் இருப்பது கேட்டை விளைவிப்பது ஆதும் என்றகொள்கையுடனன்றோ? ஜீவகாருண்யமுள்ள நீதிபதிகளும் கொலைஞர்களுக்குத் தண்டனை விதிக்கின்றனர். எனவே, மன்னனைத் தடை செய்யவில்லை பிள்ளையார் ஆதலின், அவர் கொலைபாதகர் என்று சொல்வதில் என்ன உண்மை யிருக்கிறது? எனவே, இந்த மடையர்கள் தங்களுக்குத் தாங்களே படுகுழி வெட்டிப் பாழ்நரகில் இடம் செய்துகொண்டனர் என்பதை இனியேனும் தெரிந்து மௌனம் சாதிப்பார்களாக!

"பத்தினி பத்தர்கள் தத்துவ ஞானிகள்
சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவர்
அத்தமும் மாவியும் ஆண்டோன்றில் மாய்ந்திடுஞ்
சத்தியம் ஈது சதாநந்தி தாளே."

—திருமந்திரம்

திருஞானசம்பந்தப்பெருமான் திருவடி வாழ்க.

---

எழுமின்! அன்பர்களே !! எழுமின் !!!

# இன்றே எழுமின்!!!

[இஃது சென்னை "தேசபந்து" (வாரப்,பத்திரிகை 18-5-1929`லிருந்து எடுக்கப்பட்டது.]

—∞:∞—

சமயம் என்னும் பெயரைத் தனக்கே உரிய தனிப் பெருஞ் சமயமாம் சைவசமயத்தவரே! சுயமரியாதை என்னும் புனிதப்பெயரை வைத்துக்கொண்டு, நாட்டிடை அவமரியாதையைப் பரப்பும் அறிவில்மாக்கள் காழிவேந்தனை, கவுணியர் கோவை, கண்கள் மூன்றுடையான் காதல் மகனை, ஞானசம்பந்தனைக் கொலைபாதகனெனக் கூறித் திரிதலை நீவிர் அறிபீரோ? அங்ஙனம் அவர்கள் கூறுவது உங்கள் உள்ளத்தைச் சுடவில்லை? உடலைச் சுடவில்லையா? அன்பர்களே! அவர்கள் வாயை யடக்கிச் சுயமரியாதை யென்னும் சூழ்ச்சியை நாட்டைவிட்டோட்ட இன்றே எழுமின் ! இன்னே எழுமின்!! இசைமிகப் பெறுமின்!!!

ஆஸ்திக சங்கத்தார்.—

உ

கடவுள் துணை

# சுயமரியாதைச் சம்பாஷணை

[சென்னை: ''சித்தாந்தம்'' பத்திரிகையிலிருந்து எடுக்கப்பட்டது.]

---

அழகப்பன், முருகப்பன்—என்ற இரண்டு நண்பர்கள் ஒருநாள் சாயங்காலம் சென்னைக் கடற்கரையில் உட்கார்ந்து கொண்டு பேசியதின் சுருக்கம் பின் வருமாறு:—

முருகப்பன்—அழகா! நேற்று நீ செங்கல்பட்டு சுயமரியாதை மகாநாட்டுக்கு வராமற் போனாயே, ஆ! ஆ! என்ன கூட்டம்! என்ன வேடிக்கை! என்ன பேச்சு! என்ன அருமையான தீர்மானங்கள் !

அழகப்பன்—என்ன? என்ன? விவரமாய்ச் சொல்! கேட்போம்.

மு—நேற்று இரவிலிருந்து நான் திருநீறு அணிவதை விட்டுவிட்டேன். நீ அதைக் கவனித்தாயா?

அ—ஏன் உன் வீட்டில் திருநீறு ஆய்விட்டதா? பழனியிலிருந்து நல்ல வாசனை விபூதி வந்திருக்கிறது. ஒரு படி தருகிறேன், வேண்டுமா?

மு—நீயே வைத்துக்கொள். நாங்களெல்லாம் கைதூக்கி, திருநீறு - நாமம்-சந்தனம் முதலியவைகள் ஒன்றும் நெற்றியில் அணியக்கூடாது என்று தீர்மானித்துவிட்டோம்.

அ—ஏன்? ஆபீசுக்குப் போகும் அவசரத்தில் இதற்காகத் தாமதமாய்விடும் என்று இப்படிச் செய்தீர்களா?

மு—இல்லை, இல்லை. இவைகளை நெற்றியில் அணிவதினால் சமயப் பிணக்கு உண்டாகிறதே தவிர நன்மை ஒன்றை

யுங் காணேமே. மேலும், ஏதோ இவைகளில் தத்துவார்த்தங்களெல்லாம் சொல்லுகிறார்களே; அவைகளில் எனக்கு அணுவளவும் நம்பிக்கை யில்லை.

அ—நெற்றியில் திருநீறிட்டால் சமயப்பிணக்கு எப்படி வரும்? எனக்குத் தெரியவில்லையே?

மு—என்ன! நீ காஞ்சிபுரம் வரதராஜ ஸ்வாமி கருட சேவைக்குப் போனதில்லையோ? அங்கே அப்போது பார்த்தால் தெரியும் வேடிக்கை. வடகலை தென்கலை இரண்டும் விஷ்ணுமதம்தானே! அதற்குள் எவ்வளவு சண்டை தெரியுமா?

அ—என்ன சண்டை? சொல்! கேட்போம்.

மு—ஏதோ சில பாட்டுக்களை முதலில் யார் பாடுவது என்று பலமாகச் சண்டை. முதலில் பாடுவதில் ஏதோ ஓர் உயர்வு இறக்கிறதாம். மேலும், முதலில் பாடுகிறவர்களுக்கு முதலில் மாலை மரியாதைகளெல்லாம் நடக்கிறதாம். இதற்காகத்தான் சண்டை.

அ—நீ சொல்வதிலிருந்து நாம வேறுபாட்டினுல் சண்டை வருவதாக இல்லையே? ஏதோ உயர்வு, மாலை மரியாதைக்காகத்தானே சண்டை செய்கிறார்கள்.

மு—என்ன இப்படிச் சொல்லுகிறாய் ? தென்கலை வடகலை என்ற இரண்டு பிரிவுகளில்லாவிட்டால் எல்லாரும் ஒரு கலையாய் ஒத்த மனதோடு சண்டையின்றிப் பாடலாம் அல்லவா?

அ—எல்லாரும் ஒருகலைநாமமே அணிந்தாலும், யார் முதலில் பாடுவது, மாலை மரியாதை பெறுவது என்று சண்டை செய்யமாட்டார்களா? நாம வேறுபாட்டினுல் இந்தச்

சாக்கை வைத்துச் சண்டை செய்கிறார்கள். இல்லாவிட்டால் வேறு சாக்கைவைத்துச் சண்டை செய்வார்கள்.

மு—ஆகையால், இந்த நாம வேறுபாட்டினால் சண்டைக்கு ஒரு சாக்கு ஏற்படுகிறது என்று நீ ஒப்புக்கொள்ளுகிறாயல்லவா? அதைத்தானே நானும் சொல்லுகிறேன்.

அ—ஒரு சாக்கு ஒழிந்தால் சண்டை ஒழியுமா? சண்டையை ஒழிப்பது உன் நோக்கமா, அதன் சாக்குகளில் ஒன்றை மட்டும் ஒழிப்பது உன் நோக்கமா?

மு—சண்டையை ஒழிப்பதுதான் நோக்கம். கூடியவரையில் இந்தச் சாக்குகளையெல்லாம் ஒழித்துவிட்டால் சண்டைதானே ஒழிந்துவிடுமல்லவா? இதென்ன இவ்வளவுகூடத் தெரியாமல் பேசுகிறாய்.

அ—உனக்கு இந்தச் சண்டையின் தன்மை விளங்கவில்லை. எனக்கு எத்தனையோ நன்றாய்ப் படித்த ஐயங்கார் சிநேகிதர் வடகலையிலும் தென்கலையிலும் இருக்கிறார்கள். அவர்கள் எந்த வகையிலும் வித்தியாச மில்லாமல் ஒற்றுமையாகவே இருக்கிறார்கள். அவர்கள் ஏன் சண்டையிடுவதில்லை?

மு—அவர்களெல்லாம் படித்தவர்கள். மேலும், அவர்கள் மாலை மரியாதை முதலிய விஷயங்களில் ஈடுபடுவதில்லை. அதனால் சண்டை வருவதில்லை.

அ—நன்றாகத்தான் சொன்னாய். உண்மையான படிப்பும், ஒழுக்கமும் உடையவர்களுக்குள் சமயச் சண்டை ஏற்படாது. சமயத்துக்கும் மாலை மரியாதை உரிமைக்கும் என்ன சம்பந்தம் என்று கவனித்துப் பார்! கோயில்களில் ஏதோ சில பணிவிடைகள் செய்வதற்குச் சில மரியாதைகளும் வருவாயும் பண்டைக் காலத்தில் ஏற்பட்டன. அக்

காலத்தில் பணிவிடை செய்தவர்கள் கல்வி அறிவு ஒழுக்கங்களில் மிகச் சிறந்தவர்களாக இருந்தார்கள். அக்காலத்து மன்னர்களும் சீமான்களும் அவர்கள் கல்வி அறிவு ஒழுக்கங்கட்கு மெச்சி அளவிறந்த வருவாய், மரியாதை முதலியன ஏற்படுத்திவிட்டார்கள். ஒழுக்கச் சீலர்களாக இருந்த பணியாளர்களும் வருவாயையும் மரியாதையையும் மிகைபடக் கொள்ளாது இறுமாப் பெய்தாது பரோபகாரமாகவே செலவு செய்தனர். பின்னர் அவர்கள் வழி வந்தவர்கள் செல்வமிகுதியால் கல்வி அறிவு ஒழுக்கங்கள் குன்றி, வருவாய், மரியாதை, இறுமாப்பு முதலியவைகளிலேயே நோக்கமுடையவர்களானார்கள்.

மு—அவர்களேன் அப்படி ஆனார்கள்?

அ—செல்வ மிகுதியால் முயற்சிக்குறைவும், முயற்சிக் குறைவால் கல்விக்குறைவும், கல்வியின் குறைவால் அறிவு ஒழுக்கக் குறைவுகளும் வரும் என்பதை நீ அறிவாய் அன்றோ?

மு—ஆனால், கல்வி அறிவு ஒழுக்கங்கள் குறைந்தவர்களே ஏன் அப் பணிவிடைகட்கு வைத்துக்கொண்டார்கள்?

அ—இதில்தான் மனித சுபாவம் விளங்குகிறது. கல்வி அறிவு ஒழுக்கங்கள் குறைந்த காலத்துங்கூடச்செல்வ மிகுதியால் ஆலய அதிகாரிகட்கும் நீதி அதிகாரிகட்கும் உதவிகள் செய்து பணிவிடை உத்தியோகத்தில் தாங்கள் நிலைக்கும்படி செய்துகொண்டார்கள். பிறகு நீண்ட பழக்கத்தினால் வம்ச வழியுரிமை என்ற சட்டமும் ஏற்பட்டுவிட்டது.

மு—ஆனால், அந்தச் சட்டத்தை மாற்ற முடியாதோ?

அ—ஏன் முடியாது? தேவதாசிகளைப்பற்றியமட்டில் மாற்றிவிடவில்லையா? அதைப்போலவே செய்யலாம்.

மு—ஆனையால், நீ சொல்வது கல்வி அறிவு ஒழுக்கங்கள் உள்ளவர்களிடம் சமயப் பிணக்குக் கிடையாது என்பது. இது உண்மைக்கு மாறுகவல்லவோ இருக்கிறது.

அ—ஏன் அப்படிச் சொல்லுகிறுய் ?

மு—நன்றுக ஆலோசித்துப் பார்! கல்வி அறிவு ஒழுக்கங்களிற் சிறந்தவர்கள்தானே மெய்கண்டதேவர், சங்கராசாரியார், இராமாநுஜர், மத்வர், பாஸ்கரர், நீலகண்ட சிவாசாரியார், வேதாந்ததேசிகர் முதலிய பெரியார்கள் ?

அ—ஆம், அவர்கள் என்ன செய்தார்கள் ?

மு—அவர்கள் கடவுள், உயிர், உலகம் என்ற மூன்று பொருள்களின் தன்மையையும் அவைகட்குள்ள தொடர்பையும்பற்றிக் கூறிய மாறுபட்ட கருத்துக்கள்தானே அளவில்லாத சமயப் போருக்கும் பிணக்குக்கும் காரணமாக இருக்கின்றன?

அ—இதோ, கடல் நிறத்தைப் பார்! நான் இதன் நீல நிறம் மயிலின் நீல நிறத்தைப்போல் இருக்கிறது என்கிறேன்; நீ என்ன சொல்லுகிறுய் ?

மு—இது ஆகாயத்தின் நீல நிறத்தைப்போ லிருக்கிறது என்கிறேன்.

அ—இவ்வளவுதானே. நமக்குள் கருத்து வித்தியாசம் இருக்கிறதே; நாம் அடித்துக்கொள்ளுகிறேமா? திட்டிக் கொள்ளுகிறேமா ?

மு—இல்லை. கருத்து வேற்றுமையினல் அடி திட்டு ஏன் வரவேண்டும் ?

அ—இதைத்தான் உன் வாயிலிருந்து வெளிப்படுத்த எண்ணினேன். கடவுளுக்கும் உயிர்களுக்கும் உள்ள தொடர்பை இப் பெரியார்கள் பல உதாரணங்கள் மூலமாக

விளக்கினார்கள். அவரவர்கள் அறிவுக் கேற்ற உதாரணத்தைக் கொள்ளலாம். அதற்காக மற்றொரு கொள்கையுடையோரைத் திட்டவும் வேண்டாம், அடிக்கவும் வேண்டாம்

மு—பிறகு ஏன் சமயத்துறையில் அடி தடி உண்டாகிறது ?

அ—முன்னமே சொன்னேன். கல்வி-அறிவு-ஒழுக்கக் குறைவினாலும், வருவாய் - மரியாதை முதலியவைகளைப் பற்றிய உரிமை-இறுமாப்பு இவைகளாலுந்தான் சண்டை வருகிறது.

மு—அதெல்லாம் போகட்டும். ஏன் திருநீறு அநாவசியமாக அணிந்துகொள்ளவேண்டும். எனக்கு அதில் நம்பிக்கை யில்லையே ? காரண காரியங்களை அறியாத வரையில் நான் எதையும் நம்புவதில்லை

அ—இதுவரையில் நான் உற்றுப் பார்க்கவில்லை. கையில் பொன் சங்கிலியில் ஏதோ ஒரு சிறிய உருவப் படத்தைக் கட்டித் தொங்கவிட்டிருக்கின்றாயே. அது யாருடைய படம் ?

மு—இதுதான் சுயமரியாதைத் தலைவர் படம். இந்தப் படத்தைப் பார்க்கும்போதெல்லாம் சுயமரியாதை ஞாபகம் வருகிறது.

அ—ஓ! ஓ! இது சுயமரியாதை ஞாபகச் சின்னமோ?

மு—ஆம்! ஆம்! நன்றாய்ச் சொன்னாய்.

அ—முருகப்பா! திருநீறும் அதைப்போலவே கடவுளுடைய அருள் தொழிலின் ஞாபகச்சின்னம்.

மு—அதென்ன எனக்கு விளங்கவில்லையே.

அ—உயிர்கள்: மலங்களினால் நிலைபெற்ற இன்பம் அடையாமல் கஷ்டப்படுகின்றன. அம் மலங்களை ஞானச்

சுடர் கொளுத்திக் கடவுள் தம் அருளினால் போக்கி உயிர்க ளுக்குப் பேரின்பத்தைத் தருகிறார்.

அ—நீ சொல்வதைச் சரியென்று எப்படி நம்புவது?

அ—மிகவும் எளிய வழியில் சொல்லுகிறேன் கேள்! மனிதனுக்கு இறுமாப்பு இன்பத்தைக் கொடுக்குமா ?

மு—துன்பத்தைத்தான் தரும். இறுமாப்பு மனித னுக்குக் கூடாது.

அ—தன்னுடைய சக்திக்கு அதிகப்பட்ட சக்தியின் முன்னிலையில்தானே அந்த இறுமாப்புப் போகும் ?

மு—ஆம்; அல்லாவிட்டால் அது அதிகரிக்கும்.

அ—அறிவு வளர்ச்சியினால், இன்பத்துக்கு இறுமாப்பு இடையூறு செய்யும் என்ற உணர்ச்சியோடு, அவ் விறுமாப் பைப் போக்கவேண்டுமல்லவா?

மு—ஆம்! ஆம்! நீ சொல்வது என் யுக்திக்குப் பொருத்த மாக இருக்கிறது.

அ—இறுமாப்பை மலமென்றும், பெரிய சக்தியைக் கடவுளென்றும், அறிவு வளர்ச்சியை ஞானச்சுடர் என் றும் வைத்துக்கொள்! இன்னம் பற்பல நுட்பங்க ளிருக் கின்றன. அவைகளை யெல்லாம் மற்றொரு சமயம் விளக்கு கிறேன்.

மு—பசுவின் சாணத்தினாலாகிய திருநீற்றுக்கும் கட வுள் அருட் செயலுக்கும் என்ன சம்பந்தம் ?

அ—உயிர்களுக்குச் சாத்திர பரிபாஷையில் பசு என்று பெயர். உடம்பைப்பற்றியவரையில், மலம் எப்படி எல்லா நோய்கட்கும் காரணமாய் அருவருக்கத்தக்கதாய், அது ஒழிந்த காலத்து சுகம் உண்டாகிற தன்மை யுடையதா யிருக்கிறதோ அதைப்போலவே ஆத்மாவைப்பற்றிய வகை யில் இறுமாப்பு என்ற மூலமலம் துன்பம் செய்கிறது.

மு—நீ சொல்வது என் மனதைக் கவர்கின்றது. மேலே சொல்!

அ—இம் மூலமலம் அறிவுக்குமுன் நில்லா தாகையால் இது மிருக சுபாவம் அல்லது விலங்குத் தன்மையேயாகும் விலங்குகளிற் சிறந்தது பசுமாடு. ஆகையால், பசுமாட்டின் சாணத்தை இம் மூலமலத்துக்கு ஒப்பிடலாம். அதைத் தீக்கொண்டு கொளுத்துவதை, மூலமலத்தை ஞானத் தீயினால் கொளுத்துவதற்கு ஒப்பிடலாம். கொளுத்திய பிறகு தோன்றுவது பரிசுத்தமான அருள் பிரகாசம். சாணத்தைக் கொளுத்திய பிறகு கிடைப்பது பரிசுத்தமும் வெண்மையும் ஒளியும் உடைய திருநீறு.

மு—நண்பனே! நன்றாய் உணர்ந்தேன். இவ்வளவு கருத்துக்களையும் உள்ளடக்கி * "மந்திரமாவது நீறு" என்று திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகள் கூறியது என் நினைவிற்கு வருகிறது.

அ—நானும் அதைத்தான் சொல்ல இருந்தேன். மூல மந்திரமாகிய பிரணவ பஞ்சாக்கரத்தின் தத்துவார்த்தத்தை விளக்குவது திருநீறு. அருள் வடிவான பராசக்தியின் உருவமாக விளங்குவதும் இதுவே. கோயிலில் சிவ பெருமான் அருளைக் கொடுப்பதற்கு அறிகுறியாகத்தான் திருநீறு கொடுக்கிறார்கள்.

மு—நண்பனே! உன் கையால் விபூதி கொடு! சிவச் சின்னமாகிய திருநீற்றின் உண்மையுணர்ந்தேன். வேற்றுமை யுணர்ச்சியினால்தான் சமயப் பிணக்கு வருகிறதே யொழிய சின்னங்களா லில்லை யென்று ஐயந்திரிபறக் கண்டேன். நமஸ்காரம்.



சிவமயம்

# * திருஞானசம்பந்த சுவாமிகள்

## தே வா ர ம்

—ooo—

### திருவாலவாய்-திருநீற்றுப்பதிகம்-பண்-காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்.

மந்திரமாவதுநீறு வானவர்மேலதுநீறு
சுந்தரமாவதுநீறு துதிக்கப்படுவதுநீறு
தந்திரமாவதுநீறு சமயத்திலுள்ளதுநீறு
செந்துவர் வாயுமைபங்கன் றிருவாலவாயான் றிருநீறே. க

வேதத்திலுள்ளதுநீறு வெந்துயர்தீர்ப்பதுநீறு
போதந்தருவதுநீறு புன்மைதவிர்ப்பதுநீறு
ஓதத்தகுவதுநீறு வுண்மையிலுள்ளதுநீறு
சீதப்புனல்வயல் சூழ்ந்த திருவாலவாயான் றிருநீறே. உ

முத்திதருவதுநீறு முனிவரணிவதுநீறு
சத்தியமாவதுநீறு தக்கோர்புகழ்வதுநீறு
பத்திதருவதுநீறு பரவவினியதுநீறு
சித்திதருவதுநீறு திருவாலவாயான் றிருநீறே. ௩

காணவினியதுநீறு கவினைத்தருவதுநீறு
பேணியணிபவர்க்கெல்லாம் பெருமைகொடுப்பதுநீறு
மாணந்தகைவதுநீறு மதியைத்தருவதுநீறு
சேணந்தருவதுநீறு திருவாலவாயான் றிருநீறே. ௪

பூசவினியதுநீறு புண்ணியமாவதுநீறு
பேசவினியதுநீறு பெருந்தவத்தோர்களுக்கெல்லா
மாசைகெடுப்பதுநீறு வந்தமதாவதுநீறு
தேசம்புகழ்வதுநீறு திருவாலவாயான் றிருநீறே. ௫

அருத்தமதாவதுநீறு அவலமறுப்பதுநீறு
வருத்தந்தணிப்பதுநீறு வானமளிப்பதுநீறு
பொருத்தமதாவதுநீறு புண்ணியர்பூசும்வெண்ணீறு
திருத்தகுமாளிகைசூழ்ந்த திருவாலவாயான் றிருநீறே. சு

எயிலதுவட்டதுநீறு விருமைக்குமுள்ளதுநீறு
பயிலப்படுவதுநீறு பாக்கியமாவதுநீறு
துயிலைத்தடுப்பதுநீறு சுத்தமதாவதுநீறு
அயிலைப்பொலிதருசூலத் தாலவாயான் றிருநீறே எ

இராவணன்மேலதுநீறு வெண்ணத்தகுவதுநீறு
பராவணமாவதுநீறு பாவமறுப்பதுநீறு
தராவணமாவதுநீறு தத்துவமாவதுநீறு
அராவணங்குந்திருமேனி யாலவாயான் றிருநீறே. அ

மாலொடயனறியாத வண்ணமுமுள்ளதுநீறு
மேலுறைதேவர்கடங்கண் மெய்யது வெண்பொடிநீறு
ஏலவுடம்பிடர்தீர்க்கு மின்பந்தருவதுநீறு
ஆலமதுண்டமிடற்றெம் மாலவாயான் றிருநீறே. கூ

குண்டிகைக்கையர்களோடு சாக்கியர்கூட்டமுங்கூடக்
கண்டிகைப்பிப்பதுநீறு கருதவினியதுநீறு
எண்டிசைப்பட்டபொருளா ரேத்துந்தகையதுநீறு
அண்டத்தவர்பணிந்தேத்து மாலவாயான் றிருநீறே. கo

ஆற்றலடல்விடையேறு மாலவாயான்றிருநீற்றைப்
போற்றிப்புகலிநிலாவும் பூசுரன்ஞானசம்பந்தன்
தேற்றித்தென்னனுடலுற்ற தீப்பிணியாயினதீரச்
சாற்றியபாடல்கள்பத்தும் வல்லவர்நல்லவர்தாமே. கக

திருச்சிற்றம்பலம்.

சுவாமிபெயர் - சொக்கநாதேசுரர். தேவியார் - மீனாக்ஷியம்மை

இப் பதிகம் பாண்டியராஜனுடைய சுரவியாதி தீர
அருளிச்செய்தது.

---

# ஸ்ரீ இ ரா ம லி ங் க சு வா மி க ள்

(திருஞானசம்பந்தர் தோத்திரம்)

---

உலகியலினு றுமயலி னடைவுபெற மெனதிதய
மொழிபெறவி ளங்குசுடரே
உதயநிறை மதியமுத முணவுபெற நிலவுசிவ
யோகநிலை யருளு பலையே
உனதுசெய லெனதுசெய லுனதுடைமை
எனதுடைமை யுணரெனவு ணர்த்துநிறைவே
உளவெனவு மிலவெனவு முரையுபய வசநமற
ஒருமொழியை யுதவு நிதியே
ஒன்றுடனி ரண்டெனவி தன்மையிடு மிண்டரொடு
மொன்றலற நின்ற நிலையே
உன்னலற வுன்னுநிலை யின்னதென வென்னுடைய
உள்ளுணர வுள்ளு பதியே
உன்னிலையு மென்னிலையு மன்னிய யிலைச்சிறிது
முற்றறிதி பென்ற பொருளே
உண்மைநெறி யண்மைதனி லுண்டுளமொ ருங்கிலென
ஓதுமெய்ப் போத நெறியே
அலகின்மறை மொழியுமொரு பொருளின்முடி பெனவென
தகந்தெளிய வருள்செய் தெருளே
ஐம்பூத யாதிநீ யல்லைபத் தத்துவ
வதீதவறி வென்ற வொன்றே
அத்துவா வாறையு மகன்றநிலை யாதஃ
ததீதநிலை யென்ற நன்றே
ஆணையெம தாணையெமை யன்றியொன் றில்லைநீ
யறிதியென வருளு முதலே
அன்பென்ப தேசிவமு ணர்ந்திடுக வெனவெனக்
கறிவித்த சுத்த வறிவே
அத்துவித நிலைதுவித நிலைநின்ற பின்னல
தடைந்திடா தென்ற விறையே
ஆனந்த மதுசச்சி தானந்த மேயிஃ
தறிந்தடைதி பென்ற நலமே
அட்டசித் திகளுநின தேவல்செயுநீ யவைய
வாவியிட லென்ற மணியே

இலகுபரி பூரணவி லாசமல திலைபண்ட
மெங்கணுமெ னச்சொல் பதியே
இரவுபக லற்றவிட மதுசகல கேவலமி
ரண்டினடு வென்ற பரமே
இச்சைமன மாயையே கண்டனவெல் லாமவை
யிருந்துகா ணென்ற தவமே
யான்பிற ரெனும்பேத நடைவிடுத் தென்னோ
டிருத்தியென வுரைசெய் யாசே
என்கனக ணேயெனது கண்ணேயே னிருக ண்
ணிலங்குமணி யேயே னுயிரே
என்னுயிர்க்கு யிரேயென றிவேயெனறிவூ
டிருந்த சிவமேயே னன்பே
என்றெய்வ மேயெனது தந்தையே எனையீன்
றெடுத்த தாயேயே னுறவே
என்செல்வமே யெனது வாழ்வேயே னின்பமே
யென்னருட் குருவடிவ மே
கலகமன முடையவென் பிழைபொறுத் தாட்கொண்ட
கருணையங் கடல முதமே
காழிதனி லன்றுசுரர் முனிவர்சித் தர்கள்யோகர்
கருதுசம யாதிபர் களுங்
கைகுவித் தருகினின் றேத்தமு வாண்டிற்
களித்துமெய்ப் போத முண்டு
கனிமதுர மொழுகுசெம் பதிகச் செழுஞ்சொன்மழை
கண்ணுதற் பவள மலையே
கண்டுபொழி யருண்முகிற் சம்பந்த வள்ளலாங்
கடவுளே யோத்து ரினிற்
கவினுற விளங்குநற் பணிகள்சிவ புண்ணியக்
கதியுல கறித் துய்யவே
கரையற்ற மகிழ்வினொடு செய்தருள் புரிந்திடுங்
காட்சியே சிவஞா னியாங்
கருதவரு மொருதிருப் பெயர்கொண்மணி யேஎமைக்.
காப்ப தின்கட னென்றுமே,

———

ஸ்ரீ ஆதிமூலம் பிரஸ்:—சென்னை 1929

உ

கடவுள் துணை

# வேசி மக்கள் யார்?

—∘∘✻∘∘—

## சூத்திரன் என்பதன் பொருள்

[“தேசபந்து” ஆசிரியரும், ஆஸ்திகச் சங்கத்தலைவரும், உயர் திருவாளர் சதாவதானம் தே. கிருஷ்ணசாமிப் பாவலர் (13-4-1929) ‘தேசபந்து’வில் எழுதுவது.]

சுயமரியாதைக்காரர்கள் என்று இதுபோது வெளி வந்துள்ள அவமரியாதைக்காரர்கள், தாங்கள் சொல்வது இது, செய்வது இது என்னும் பகுத்தறிவும் இல்லாது நாட்டில் உலாவிவருகின்றனர். இவ்வறிவற்ற மாக்கள், தங்கள் அறியாமைப் பொக்கிஷத்தை நாட்டிடையே அவிழ்த்தளப்பதை நம்மவருள் சிலர் மயங்கிக் கண்டு களிக்கின்றனர். அவர்கள் மயக்கத்தைப் போக்கவே இந்தக் கட்டுரையை எழுதத் துணிந்தோம்.



இந்த மானமற்ற கூட்டத்தினர் சூத்திரர்கள் என்றால் வேசிமக்கள்-வியபிசாரி மக்கள்-பிராமணனுக்கும் வேசிக்கும் பிறந்தவர்கள் என்று பிராமணர்கள் கூறுவதாகவும், அப்பொருளை நீங்கள் ஒப்புக்கொள்வது சுயமரியாதையா என்றும் கேட்கின்றனர். அம்மட்டோ! சூத்திரன் என்ற பதத்தின் உயர்பொருளை மனத்துக்கொண்டு “நீடு சூத்திர நற்குலம் செய்தவத்தினால்” என்று மாறநாயனார் புராணத்தில் பாடியருளிய அறிவிற் பெரியாராய்ப், பெருந்தமிழ்முனிவராய்த், தமிழர் வணங்கும் ஆசிரியர் சேக்கிழார் அவர்களை வஞ்சகரென்றும், சுயமரியாதையற்றவர் என்றும் சிறிதும் அச்சமின்றிக் கூறியும் வருகின்றனர். அதுகேட்டு நம்மவருள் சிலர், நாம் பிராமணர்களின் வேசிப் பிள்ளைகளா என்று சின

ந்து, அந்தப் பகுத்தறிவற்ற கூட்டத்தினருக்கு ஆதாவும் தர முற்பட்டுவிட்டனர். உண்மையில் பிராமண, க்ஷத்திரிய, வைசியர் ஒழிந்த சூத்திரர்களைத் தேவடியாள் மக்கள் என்றும், பிராமணரின் வைப்பாட்டி மக்கள் என்றும் மானம் இன்றியும் வாய் கூசாமலும் கூறுகிறவர்கள் இந்த மானங் கெட்ட சுயமரியாதைக் கூட்டத்தினரா அல்லது பிறரா என நாம் கேட்கிறோம். பாரதநாட்டுப் பெண்மணிகள்: பெண் தெய்வங்கள் என்றும் கற்பிற்கணிகலன்கள் என்றுமே நம் பெரியார்கள் கூறுகின்றனர். அவர்கள் பெண்களை வாழ்த்துக் கூறும்காலையில் நீ ஜானகியாக விளங்கு என்பதன் பொருள்தான் என்னே? ஜானகியை வேசியென்றும் விபசாரியென்றும் கூறும் இந்த அயோக்கியர்களுக்கு அந்த ஆசிமொழியினது அருத்தந்தான் விளங்குமோ? ஒரு பிராமணன்: சூத்திரன் என்பதற்கு வைப்பாட்டி மகன் என்று பொருள் கூறியிருப்பானுயின், கூறுவனுயின் அவனை இந்தச் சுயமரியாதைப்பேடிகளைப்போல் நமது நாட்டுப் பிராமணரல்லாதார் வாளா உயிருடன் விடார்கள் என்பதை இவர்கள் அறியாமற்போயது தங்கள் ஆண்மை யில்லாமையையே தெரிவித்துக்கொள்வதாகும். பிராமணனுக்கு வைப்பாட்டி மகன் என்ற பொருள் சூத்திரன் என்ற பதத்திற்கு உண்டு என்றும், பிராமணரல்லாத உயர்வேளாளர் குலத்தில் உதித்த இளையான்குடிமாறனுரைச் சிறப்பித்துக் கூறிய சேக்கிழாரைச் சுயமரியாதையற்றவர் என்று, கூறும் இவர்கள் வேண்டுமாயின் அப்பொருளைத் தமதாக்கிக் கொள்ளட்டும். அதை யெவரும் மறுக்கப் போவதில்லை. அதுகாலையிலும் அம்மாக்களைப் பெற்ற பதிவிரதா ரத்னங்கள்மேல் அக்குறை சூழும் என்று நாமே கண்டிக்கத் துணிவோம். வியபிசாரி மக்கள் என்று சூத்திரர்களைப் பிராமணர்கள் அவமதித்து

வந்திருப்பது உண்மையானல், நமது முன்னோர்கள் எல்லோரும் பேடிகள் என்பது இந்தப் போக்கிரிகளின் கொள்கையா என்று நாம் கேட்கின்றோம். இந்தப் பேடிகளைவிட நம் முன்னோர்கள் பெரிதும் தங்கள் மானத்தில் திருஷ்டி உடையவர்கள் என்பதும், அவர்கள் ஒருபோதும் தன்மதிப்பிற்குத் தாழ்வுண்டாகச் சம்மதிக்கார்கள் என்பதும் அவமரியாதை அன்னக்காவடிகள் எவ்வாறு அறிவார்கள்? உயர் பொருளிருக்க அதை விட்டு, நம்மை வியபிசாரி மக்கள் என்று ஒருசாரார் கூறுமலிருந்தும் கூறுகின்றனர் என்று வெட்கமின்றிக் கூப்பாடு போடுகின்றவர் உண்மையில் சுயமரியாதைக்காரர்களா அல்லது அவமரியாதைக்காரர்களா என்பதை நாட்டவர்களே தெரிந்துகொள்வார்களாக.

இனி பிராஹ்மண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என்னும் நான்கு வருணங்களையும் குறிக்கும் பதங்களுக்கு உலகில் எவ்வாறு பொருள் கொள்ளப்படுகிற தென்பதைக் கவனிப்போம். சொல்: இடுகுறியாலாவது, காரணத்தாலாவது, காரண இடுகுறியாலாவது தன் பொருளை யுணர்த்தும் என்பது சாமான்ய இலக்கணஞானம் உடையவரும் தெரிந்த விஷயம். இதையே ரூடி, யோகம், யௌகிகம் என்று வியாகரண நூலாரும் உரைப்பர். மேற்கூறிய நான்கு வருணங்களைக் குறிக்கின்ற சொற்களாகிய பிராமண, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர என்பன கல், மண், மரம் என்ற சொற்கள்போல் இடுகுறியளவாக நின்று பொருள் உணர்த்துவனவல்ல; காற்ரூடி, முள்ளி என்னும் சொற்களைப்போல் காரண இடுகுறிப் பெயராய், யோகரூடமாய்ப் பொருள் உணர்த்துவனவாகும். காரணம் கருதிய இடத்து அக்காரணமுடைய பலவற்றிற்கும் பெயராக வழங்கக்கூடியதாயினும், அங்ஙனமாகாது அக் காரணம் பற்றிய ஒன்றற்கே இடப்பட்ட குறியாய்

வழக்கும் சொல் காரண இடுகுறி எனத் தமிழ் நூலாரும், யோகரூடமென வடநூலாரும் உரைப்பர். அங்ஙனமே காற்றாடி, முள்ளி என்னும் இருசொற்களை நோக்குங்கள். காற்றில் ஆடுவனவெல்லாம் காற்றாடி, முள்ளு டையனவெல்லாம் முள்ளியாயினும் காற்றில் ஆடும் பட்டத் தையும் முள்ளிச் செடியையுமே முறையே இரு சொற்களும் குறிக்கின்றன. இங்ஙனமே அந்த நால்வருணத்தையும் குறிக் கும் நாற்சொற்களும் காரண இடுகுறிப் பெயர்களே யாகும் என்பது சிறிது இலக்கண, சாத்திர ஞானமுள்ளவர்களும் தெரிந்துகொண்ட உண்மையாகும். நெடுங்கணக்கில், அஃ தாவது, அரிச்சுவடியில் இத்தனை யெழுத்துக்கள் உள்ளன என்பதும் தெரியாத நிரக்ஷரக் குக்ஷிகள் இப்படிப்பட்ட விஷயங்களில் எல்லாம் தெரிந்தவர்போல் பேசவும் எழுதவும் முன்வருவது கலிகாலக் கொடுமையேயல்லாது வேறென் னென்பது? மற்றைய மூன்று வருணத்தைக் குறிக்கும் சொற் களுக்கு மாத்திரம் காரண இடுகுறியாகப் பொருள் கொண்டு, சூத்திரன் என்ற பதத்திற்கு மாத்திரம் வைப்பாட்டி மகன் என்று இடுகுறியளவாகப் பொருள் காண்பது என்ன பகுத் தறிவென்று, பகுத்தறிவு தமக்கதிகம் உண்டென்று படா டோபம் செய்யும் ஈரோடு நாஸ்திகரைக் கேட்கிறோம்.

இனி அந்த ஈரோடு நாஸ்திக மகானுக்கு மற்றைய மூன்று வருணங்களையும் குறிக்கும் சொற்கள் எவ்வாறு காரண இடுகுறியாக நின்று பொருள் உணர்த்துகின்றன என்பது மூளையில் ஏறாமல் இருக்கலாம். அதையும் அவர் மூளையில் நுழையுமாறு செய்வோம். பிராமணன் என்ற பதம் பிரஹ்ம ஞானத்தி—பிராஹ்மணு என்ற காரண இடு குறியால், அஃதாவது பிரஹ்மஞான முடையவர் பிராம ணர் என்னும் காரணத்தால், பிரஹ்மக்ஞானம் கைவரப்

பெற்ற ஞானிகள் எல்லோரையும் குறிப்பதாக இருந்தாலும் பிரஹ்மக்ஞானமுடைய பிராமணர்களை இடுகுறியளவாகக் குறிக்கின்றன. இதனால், இந்தக் காலத்தில் பிராமண தர்மத்தை மறந்து, சாஸ்திரி பிள்ளை மடையனானாலும் சாஸ்திரி என்றும், கூட்டிக்கொடுக்கும் தொழில்முதல் மலமெடுக்கும் தொழில் ஈறாகச் செய்யும் பிராமணர்களைப் பிராமணர்கள் என்றும் நாம் வகாலத்து வாங்கிப் பேசவந்ததாக அவமரியாதைக் கூட்டத்தார் தூற்றவும் செய்வர். அத் தூற்றலைக் கண்டு நாம் ஒருபோதும் அஞ்சோம்.

க்ஷத்ரியர் என்ற சொல்லும், க்ஷதாத்திராயதே இதி க்ஷத்ரிய என்றும் பிறருக்கு (உலகத்தில் உண்டாக்கும்) தீமைகளை நீக்குபவன் என்ற பொருளுடன் க்ஷத்ரியரையும், வைசியர் என்ற சொல் விசம் (திரவிய சமூகம்) சியாவையதி இதி வைசியா என்று திரவிய சமூகங்களைச் சேமித்து விநியோகிப்பவர் என்ற பொருளுடன் வைசியரையும் குறிப்பனவாகின்றன. அப்படியே சூத்திரன் என்ற சொல்லும் காரண இடுகுறிப் பெயராகும். அது, சு—சுக்—சுசம் (துக்கம்) உத்தராவயதி (தூக்கி எறிவதால்) இதி சூத்ர என்று பிறருக்கு உண்டாகும் துக்கங்களைத் தூக்கியெறியும் காரணத்தால் சூத்திரர் என்ற பெயர் அவ் வருணத்தவருக்குக் காரண இடுகுறியாகிறது. இதைவிட்டு, வறட்டுத்தவளையைப்போல் மநுஸ்மிருதி எட்டாவதத்தியாயம், 415, 417 சுலோகங்களில் உள்ளனவற்றைத் திரித்துத் தமது அறியாமையால் சூத்திரன் என்பதற்கு வியபிசாரிகள் என்று பொருள் கொண்டால், அது உண்மையில் வியபிசாரி மக்கட்கே ஏற்றதுமேயல்லாது, பாரத நாட்டுப் பெண் தெய்வங்களுக்கு அப் பொருள் ஒருபோதும் பொருந்துதலாகாது.

இனி இவர்கள் கூறுவதற்கு ஏதேனும் ஆதாரம் உண்டா என்று பார்ப்போம். சூத்திரன் என்றால் வேசிமகன். ஆத

லால், பிராமணர் அல்லாதவர்கள் எல்லோரும் வேசிமக்கள் என்று உளறுவதற்குக் கீழ்க்கண்ட மநுஸ்மிருதியின் இரண்டு சுலோகங்களையே குறிக்கின்றனர். அவை வருமாறு:—

(415) யுத்தத்தில் ஜயித்துக்கொண்டு வரப்பட்டவன், புத்தியினுல் வேலை செய்கிறவன், தன்னுடைய தேவடியாள் மகன், விலைக்கு வாங்கப்பட்டவன், ஒருவனுல் கொடுக்கப் பட்டவன் குலவழியாகத் தோன்றுதோட்டு வேலை செய்கிற வன், குற்றத்திற்காக வேலை செய்கிறவன் எனத் தொழிலா ளிகள் எழுவகைப்படுவர்.

(417) பிராமணன் சந்தேகமின்றி மேற்சொன்று எழு விதத் தொழிலாளிகளான சூத்திரரிடத்தினின்று பொருளை வலிமையாலும் எடுத்துக்கொள்ளலாம்.

இவ் விரண்டு சுலோகங்களில் சூத்திரர் என்பதற்குத்தே வடியாள் மகன் என்பது பொருள் என்பது எங்கே தொனிக் கிறது. சூத்திரர்கள் என்பதற்குரிய பொருளை முன்னரே யாம் கூறியுள்ளோம். அவர்களுள் முற்கூறியபடி எழுவகை யானவர்களும் சேர்க்கப்பட்டுள்ளனர். பிராமணர்களுள், குடிகாரப் பிரஷ்டன், கொலைகாரப் பிரஷ்டன், பொய்சொல் லும் பிரஷ்டன் என மூவகையினர் இருக்கிறார்கள் என்றால் அந்த மூன்று வகையினர்தாம் பிராமணர்கள் என்றுவது கொலைகாரப் பிரஷ்டன்தான் பிராமண சப்தத்தின் பொருள் என்றுவது எவரேனும் கொள்வார்களோ? அப்படிப் பொருள் கொள்வோர் உலகில் இருப்பரேல் அவர்கள் இந்தத் தன் மதிப் பற்ற சோம்பேறிகளே என்பதில் ஒரு சிறிதும் ஐயம் இல்லை.

சூத்திரன் என்பதற்குப் பிற வருணத்தவர்க்கு உண் டாகும் துன்பங்களை அற வோட்டுபவன் என்பது பொருள் என முன்னர்க் கூறினேம். இப் பொருள் எமது கற்பனையால்

உண்டானதல்ல; சாஸ்திரங்கள் ஒப்புக்கொண்டது. இத்தகைய உயர்வு, பிற உயிர்களுக்கு உண்டாகும் துன்பங்களைப் போக்கும் குணம் எவர்க்கு உண்டாகும்? அன்பே வடிவாய் அமைந்தவர்க்கன்றோ ஏற்படும்? அன்பற்ற வன்பர்கள் பிறர்க்குண்டான ஊறுகளைத் தொலைக்கவும் எண்ணமாட்டார்கள் அன்றோ? அன்பின் மாட்சியில் நிலைத்துள்ள ஓர் வகுப்பினருக்கு அன்பர் என்னும் உயர்பொருளைத் தரும் சூத்திரர் என்ற பதத்தை நமக்கு வேதங்களும் சாஸ்திரங்களும் தந்திருக்க, அப் பெயரை வேண்டாம் என்று தள்ளுவதைவிட அறியாமையும் அயோக்கியத்தனமும் வேறுண்டோ? எல்லோரையும் அவமரியாதைக்காரர்கள் என்று கூறியும், அவமரியாதையையே அனவரதம் சிந்தித்தும், அவமரியாதையை நாட்டில் பரப்பியும் வரும் அவமரியாதைக்கூட்டத்தினராகிய சுயமரியாதைக்காரர்களுக்கு இந்த உயர்வான சுயமரியாதைப் பதம் அவமரியாதையாகத் தோன்றுவது அதிசயமாகாதன்றோ?

இனி இவர்கள் கருத்துப்படி சூத்திரர் என்ற பதத்திற்கு வைப்பாட்டி மகன் என்பதே பொருளாக வைத்தனர் என்பதை வைத்துக்கொள்வோம். அதனால் பிராமணர்கள், க்ஷத்திரியர்கள், வைசியர்கள் எல்லோருமே அப் பொருளுடையவராவர் என்பது சாஸ்திர ஞானம் உடையார் ஒப்புக்கொள்ள வேண்டியதே. ஏனெனில், இந்த அவமரியாதை வீரர்களுக்கு எல்லா நூல்களும் பிராமணர்களாலே எழுதப்பட்டன வென்பது கொள்கை. இதனால் பிராமணர் அல்லாதவர்களுக்குச் சாஸ்திரங்கள் எழுதும் அறிவில்லையென்ற சுயமரியாதையை யெப்போதும் தெரிவித்துவருகிறார்கள். ஆகவே, பிராமணர் ஒழிந்தவர்கள் அனைவரும் மதியற்ற மடையர்களென்று சொல்லும் இவர்களைச் சுயமரியாதை விரும்பும்

பிராமணரல்லாத சில சகோதரர்கள் சுயமரியாதைக்காரர்களென்று போற்றும் மாயந்தான் விளங்கவில்லை. இந்தப் போலிச் சுயமரியாதைக்காரர்கள் சொல்வதுபோலவே அனைத்து நூலும் பிராமணர்கள் எழுதியன என்று வைத்துக் கொள்வோம். அந்தப்பிராமணர்கள் தங்களைத்தாங்களே வைப்பாட்டிமக்கள் என்று கூறிக்கொள்ள ஒருப்படுவார்களா என்று அவமரியாதைக்காரர்களது பகுத்தறிவை வினவுகிறோம். எந்த மநுஸ்மிருதி முன் வைப்பாட்டிமகனும் சூத்திரர்களுள் சேர்ந்தவன் எனக் கூறியதோ அந்த நூல் பிராமணன் பிறந்தபோது சூத்திரனாக ஜனிக்கிறான் என்றும், கர்மத்தால் துவிஜனாகிறானென்றும், வேதாத்யயனம் செய்து விப்ரன் ஆகிறான் என்றும், கடைசியாகப் பிரஹ்மக் ஞானம் கைவரப் பெற்றுப் பிராமணனாகிறான் என்றும் சொல்வதன் தாற்பரியம்அறியாததன்றே. பிறக்கும்போதுபிராமணனல்ல, சூத்திரனாகப் பிறக்கிறான் என்பதால் பிராமணனும் வைப்பாட்டிப் பிள்ளையாகப் பிறக்கிறான் என்பது பொருளாகுமா? துவிஜர்கள் என்பார்க்கெல்லாம் இது பொருந்துமாதலால் பிராமணர் ஒழிந்த க்ஷத்திரிய வைசியர்களும் பிறக்கும்பொழுது சூத்திரராய், வைப்பாட்டி மக்களாய்ப் பிறக்கிறார்கள் என்ற பொருள் கொள்ளவேண்டுமா? இப்படியும் ஒரு நூல் செய்வார்களா என்பதை யொருசிறிதும் சிந்தியாது தான்தோன்றிகளாய், எங்களுக்குப் படிப்பில்லை; சாஸ்திரங்கள் வேண்டாம்; ஆனால், சாஸ்திரங்களைப் பகுத்தறிவு கொண்டு குறை கூறுகிறோம் என்றால், இவர்கள் பகுத்தறிவு இவ் விஷயத்தில் எவ்வளவுவரையில் பயன்படுகிறது என்பதை அவர்கள் உணர்வார்களாக.

## நாஸ்திகம் ஒழிக!

## ஆஸ்திகம் ஓங்குக!!

---

ஸ்ரீ ஆதிமூலம் பிரஸ், சென்னை:—1929.